# கல்கி

KALKI
15.7.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

குடும்பத்துடன் படிக்க...



அடுத்த குறி...?
விஜயகாந்த் பேட்டி



விற்பனைக்கு வரும்
# காதல்!

உங்கள் கல்கியில் ஆரம்பம்...

ஆகஸ்டு 5 ஆண்டு மலர்
இதழிலிருந்து...

சிலிர்ப்பூட்டும் சரித்திர நாவல்

# பார்த்திபன் கனவு



எழுத்தால் ஈர்க்கிறார்... அமரர் கல்கி

தூரிகையால் கவர்கிறார்... ஓவியர் ஸ்யாம்

வெண்திரையை விரிக்க வருகிறார்கள்
பிரபல சினிமா கலைஞர்கள்!



அவ்வளவுதானா?

பழரசத்தில் மிதக்கும் சுளைகளாக போட்டிகளும் உண்டு!

பரிசு பெறத் தயாராகுங்கள் வாசகர்களே!

## கலக்கல் ஆரம்பம்!





கல்கி

# ச்சும்மா... அதிருதுல்ல!

என்றைக்கோ அருள்வாக்காக மொழிந்த ஜகத்குருவின் அமுத மொழிகள் இந்த இரண்டாயிரத்து ஏழாம் ஆண்டில் மட்டு மல்ல, இனி எதிர்வரும் காலத்துக்கும் மிகப் பொருத்தமானது. இன்றைய இளைய சமுதாயம் நிச்சயம் கடைபிடிக்க வேண்டிய அரியதொரு மொழி.

**-ஆர். இராமமூர்த்தி, சிதம்பரம்**

மூன்று சிறுகதைகளுக்கும் ரஜினி, விஜய், அஜீத் 'பஞ்ச்'களாகப் போட்டிருந்த கமெண்ட்டுகள் 'மன்ச்' சுவையை அளித் தன!

**- ஸ்ரீகாந்த், நெய்வேலி**

பெண் என்பதற்காக பிரதிபா பாட்டீலை ஜனாதிபதி வேட்பாளராகத் தேர்ந் தெடுத்தோம் என்று சொல்லும் அரசியல் வாதிகளுக்கு தராசுவின் பதில் நல்ல சவுக்கடி.

**- பா.சு.மணிவண்ணன், திருப்பூர்**

ரஜினி படம் என்பதற்காக 'சிவாஜி' படத்தை ஓஹோ, ஆஹா என்று ஆர்ப் பாட்டமாய்ப் பாராட்டாமல், சரியான முறையில் விமர் சனம் செய்திருப்பது கல்கி யின் நடுநிலைமையைக் காட் டியது.

**- ப.மூர்த்தி, பெங்களூர் - 60**

வாசகர்களின் ஒருமித்த கருத்துடன் சிங்கம்போல சிங்கிளா வெளிவரப் போகும் ஒரே வார இதழ் கல்கிதான். ஆகஸ்ட் ஆண்டு மலர் இதழை நெனைச்சாலே கல்கி வாசகர்கள் மனம் சந்தோஷத்துல ச்சும்மா அதிருதுல்ல!

**- ஜி.சுந்தரமூர்த்தி, அரியலூர்**

மாணவ - மாணவிகளுக்கு வங்கிகள் வழங்கும் கடனுதவிகள் குறித்துக் கூறியிருந்தது பயனுள்ளதாக இருந்தது.

**- கீதா முருகானந்தம், திருவைகாவூர்**

நடிகர், கதாசிரியர், இயக்குனர், தயாரிப் பாளர் எனப் பல முகங்கள் கொண்ட பார்த்திபன், வாராவாரம் தம் எழுத்து வன்மை மூலம் வாசகர்களைக் கட்டிப் போடுகிறார். சிவாஜி ரஜினியும் அதில் தப்பவில்லை.

**- பிரபாலிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்**

## வட்டமேஜை



**டா**க்டர் மிஸ்ரா உடல் பருமனைக் குறைக்கச் சொன்ன வழிகள் பயனுள்ளவை! 'அன்றாட உணவில் புரதச்சத்தை அதிகமாகச் சேர்த்துக் கொண்டு கொழுப்பு, மாவுச் சத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள்' என்ற டிப்ஸ் ஆரோக்கிய வாழ்வுக்குப் போடப்பட்ட பிள்ளையார் சுழி!

**- பா.அச்சுதன், வயலூர்**

**சோ**.சுப்புராஜின் 'தாம்பத்யம்' கவிதை, எளிய நடையில் அழகு தமிழில் கவர்ந்தது!

**- ஜெ.மகேஷ்குமார், கோவில்பட்டி**

**கு**ட்டீஸ்களுக்கு ஓவியம் வரைய கற்றுக் கொடுத்து அவர்களின் திறமையை வெளிக் கொண்டு வரும் ப்ரியா பாராட்டுக்குரியவர்.

**- பி.சிவா, பாளையங்கோட்டை**

## ஸ்பீட் போஸ்ட்!

**தா**.பாண்டியன் போலவே எல்லா கட்சித் தலைவர்களும் இருந்துவிட்டால் எவ்வளவு சுகமாக இருக்கும்!

**- அ.முரளிதரன், மதுரை - 3**

**தே**சத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு எந்த வகையிலும் உதவாமல், சில தனி மனிதர்களின் வளர்ச்சிக்கு மட்டுமே பயன்படும் திரைத் தயாரிப்புக்கு வங்கிக் கடன்கள் வழங்கப்படுவது - சிந்தனைக்குரியது!

**- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

**பா**ர்த்திபனுக்கு ரஜினி மேல் அப்படியென்ன க்ரேஸோ...! இரண்டு வாரங்களாக இந்த இடி இடிக்கிறாரே! ஜாக்கிசான் மூச்சு நின்றது. ஜாக்கிசானைத் தெரியாத போப்பாண்டவருக்கு ரஜினியைத் தெரிகிறது என்பதெல்லாம் அபத்தத்தின் உச்சம்!

**- எஸ்.அன்புமணி, ஈரோடு**

**ம**துரை மேற்கு வாக்காளர், அரசியல் தலைவர்களைப் புறந்தள்ளி தேர்தல் ஆணையத்துக்குப் பெரிய மாலை அணிவித்துப் பாராட்டுகளைத் தெரிவிக்கும் கருத்துப் படம் ஆழமானது.

**- ச.இராசன், திருச்சி**




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# காதலில் வெற்றி பெறுவது எப்படி?

'**கா**தலிப்பது எப்படி?' 'பிரியமானவளை நேசிப்பது எப்படி?' '30 நாட்களில் காதலிக்க...' 'வசதியானவர்களைத் திருமணம் செய்து கொள்வது எப்படி?' - வரப்போகும் தமிழ் சினிமா டைட்டில்களல்ல இவை... சந்தையில் கிடைக்கும் 'காதல் உலக' புத்தகங்கள். புனிதமான உணர்வு என்று கூறப்பட்ட காதல், இன்று கடைச்சரக்காகி விற்பனைக்கு வந்து விட்டது வருத்தமான விஷயம் என்று ஒப்புக்கொள்ளவாவது யாரேனும் இருக்கிறார்களா?

இது யாரால் நேர்ந்த பிழை? காதலுக்கு கௌரவம் சேர்க்க வேண்டிய காதலர்களே அதற்கு மலர் வளையம் வைக்க ஆரம்பித்து விட்டார்களா? அடியோடு மறுக்கிறார் காதல் திருமணம் புரிந்துள்ள தேவி.

''காதலுக்கு எதிரி காதலர்கள்னு சொல்றதை நான் ஒப்புக்க மாட்டேன். காதல்ங்ற போர்வையில ஊடுருவி கள்ளத்தனம் பண்ற சில கறுப்பு ஆடுகளாலதான் காதலுக்குக் கெட்ட பேரு. ஒரு செடியில் எப்படி, எப்போ பூ பூக்குதுன்னு யாரால யாவது சொல்ல முடியுமா? அப்படித்தாங்க காதலும்... எப்போ, எந்த நிமிஷம் மனசுக்குள்ள அரும்பும்னு தெரியாது. மலரத் தேவை அன்பு நிறைஞ்ச ரெண்டு உள்ளங்கள்தான்; கடையில விக்கற புத்தகங்கள் இல்ல. நீங்க சொல்ற மாதிரியான புத்தகங்கள பார்த்துப் பண்ணா, அதுக்குப் பேரு லவ் இல்ல; ஜவ்வு. உணர்வுகள் தானா வரணும். உகப்பேத்தி கொண்டு வர முடியாது. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாதுன்னு சும்மாவா சொன்னாங்க? எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர் இது மாதிரி புக் படிச்சுட்டுப் போய் ஒரு பொண்ணை லவ் பண்ணினார். அவ சட்ட பண்ணவே இல்லையே... கடைசியில அவரை ஒரு பொண்ணு உண்மையா காதலிக்க, அப்புறம்தான் கல்யாணமாச்சு'' என்று தேவி படபடவென்று பேசப் பேச... கூட சேர்ந்து கொண்டார் அவரது கணவர் தமிழ்ச்செல்வன்.

''இந்த மாதிரி புத்தகங்கள் தலைப்பு கவர்ச்சிக்காக வேணா நிறைய விற்பனையாகலாம். ஆனா நிச்சயமா அவற்றால் பிரயோஜனம் இருக்காது. இப்படிப் புக் பார்த்து ஆரம்பிக்கற காதல், கல்யாணத்துல போய் முடியும்னு



* தமிழ்ச்செல்வன் - தேவி

* படங்கள் : பொன்னாச்சி சுந்தரம்

# விற்பனைக்கு வரும் காதல்!

எனக்குத் தோணல. புக்கைப் படிச்சா காதல் வரா துங்க... வெறும் கிக்தான் வரும்!'' என்றார்.

**வ**ள்ளுவர் கோட்டம், வண்டலூர் பூங்கா, மெரினா - எலியட்ஸ் பீச், சிறுவர் பூங்கா, மாயாஜால் என்று பொழுதுபோக்கு இடங்கள் அனைத்தும் இன்றைக்குக் காதலர்களின் தினவு தீர்க்கும் லொகேஷன் களாகிவிட்டன! உரசிக் கொள்வது, ஒட்டிக் கொள்வது, கட்டியணைப்பது, முட்டிக் கொள்வது, முத்தமிடுவதும்கூட பப்ளிக் டிஸ்ப்ளே ஆகி வருகிறது சென்னை மாநகரில்.

''காரணம் சினிமாதாங்க. அது தர்ற மயக்கத்துலதான் இன்னைக்குச் சின்ன வயசுலயே இளம் ஆண், பெண்கள் பருவக் கிளர்ச்சிக்கு ஆட்பட்டு, காதல்னு சொல்லிக்கிட்டு தங்களைத் தாங்களே ஏமாத்திட்டுத் திரியறாங்க. காதலர்கள் னாலே சமூகம் இப்போ கீழ் பார்வை பார்க் குது. அவங்க ஒழுங்கா இல்லாததுதான் காரணம். தான் என்ன பண்றோம்னு தெரி யாமயே பண்ணிடறாங்க. சினிமாத்தனமா உறவாடுறதுதான் காதல்னு அவங்களாவே அர்த்தம் கற்பிச்சுக்கறாங்க. மெய்யான, ஆழமான காதல்னா பயபக்தி இருக்கும். கண்கள்தான் பேசிக்கும்; மனசுதான் வாசிக் கும். ஆனா இன்னைக்கு பீச்ல போய் பாருங்க... அடிக்கிற வெயில்ல குடையை வெச்சுக்கிட்டு டூயட் பாடிக்கிட்டு இருக் காங்க. இது கேவலம் இல்லையா? இதை காதலர்களே நிகழ்த்த லாமா? காதல் தேவதை தன்னோட கையைக்கொண்டே தன் கழுத்தை நெறிச்சுக்க அனுமதிக்கலாமா?'' - விளாசித் தள்ளுகிறார் பதினைந்து வரு டங்களுக்கு முன்பு காதல் திருமணம் புரிந்துகொண்ட அறிவழகன்.

**இ**து குறித்தெல்லாம் காதலர்கள் என்ன சொல்கிறார்கள்? மெரினா பீச்சில் தீவிரமாகக் காதலித்துக் கொண்டிருந்த ப்ரியா - ரவி (புகைப்படத்துக்கு மறுத்து விட்டார்கள்) ஜோடியிடம் கேட்டபோது,

''புக் பார்த்து காதலிக்கறதெல்லாம் கதைக்காவாதுங்க. வேணா ஆரம்பகட்ட அத்தியாயங்களுக்கு உதவலாம். மேற் கொண்டு காதல் வளரணும்னா நிச்சயமா புக்கை நம்பிப் பிரயோஜனமில்ல. எனக் குக்கூட இவளை லவ் பண்ண என் ஃப்ரெண்டு ஒருத்தன் 'மச்சான் புக்ல கிடைக்காத ஐடியா இல்ல... இந்தா'ன்னு ஒரு புக்க கொடுத்து ஹெல்ப் பண்ணான். அது, எப்படி வகை வகையா காதல் கடிதம் எழுதறதுங்கறதப் பத்தின புத்தகம். எல் லாத்தையும் கரைச்சுக் குடிச்சு சொந்தமா ஒரு லெட்டர் எழுதி நீட்டினப்ப, இவ அதை வாங்கவே இல்ல. அப்புறம் நல்ல நண்பர்களாகி என்னை முழுசா புரிஞ்சுக்



* ரவி தமிழ்வாணன்

'காதலிப்பது எப்படி?' வகையறா புத்தகங்களின் விற்பனை, டார்கெட் வாசகர்கள் யார் என்பது குறித்து மணி மேகலைப் பிரசுரத்தின் நிர்வாகியான ரவி தமிழ்வாணனிடம் பேசினோம்.

''இதுபோன்ற புத்தகங்களால என்னமோ காதலே விற்பனைக்கு வந்துட்டதா சொல்லப்படறது தப்பு. குண்டானவர் உடல் இளைக்க, வேலை கிடைக்கன்னு ரெண்டாயிரத்துக்கும் மேற்பட்ட டைட்டில்கள்ல புத்தகங்கள் வெளியிடறோம். காதல் வகையில இப்படிச் சில புத்தகங்கள், அவ்வளவுதான். எதையுமே சொல்லிக் கொடுக்கறது நல்லதுதானே. அப்பத்தானே இனக்கவர்ச்சிக்கும் காதலுக்கும் வித்தியாசம் தெரியும். இளைஞர்கள்தான் இந்த மாதிரி புத்தகங்கள வாங்கறாங்க. அதுலயும் அதிகமா கிராமத்துப் புள்ளைங்க. சிட்டி கிட்ட பின்னாடிதான் காதலிக்க ஆரம்பிச்சோம். எதுக்குமே தியரி ஒத்து வராது பாஸ். பிராக்டிக்கல்தான் பிக்கப் ஆகும்'' என்றார் ரவி. ப்ரியாவும் ஆமோதித்தார்.

'சினிமா, காதலர்கள்... காதலை குட்டிச் சுவராக்காதா?' என்றதற்கு,

''அது அவங்கவங்க மனப் பக்குவத்தைப் பொருத்தது. நாம எந்தளவு எந்த விஷயத்தையும் உள்ள ஊடுருவ விடுறோமோ, அந்த அளவு அது வளர்ந்து நமக்குள்ள வியாபிக்குது. பிறகு அதுவாத்தான் நாம மாறிப்போயிடறோம். சினிமாவ சுவாசிக்க ஆரம்பிச்சா சினிமாத்தனமாத்தான் ஒரு மனுஷன் உருவாவான். அவன் காதல் மட்டும் விதிவிலக்கா என்ன?'' என்றனர் இருவரும்.

'காதலை இவ்வளவு வெளிப்படையா காட்டிக்கணுமா... ரோட்ல, பீச்ல, தியேட்டர்லன்னு பின்னிப் பிணைஞ்சே அதை பாதாளத்துல தள்ளறது சரியா?' என்றால்,

''காதலர்களுக்குன்னு தனி ஸ்பாட் எதுனா இருக்குதா இங்க? வேற வழியில்லாமத்தான் இப்படி அங்கே, இங்கேன்னு சுத்த வேண்டியிருக்கு. உத்துப் பார்த்திங்கன்னா உண்மையான லவ்வர்ஸ் இப்படி சந்திச்சுக்கறதே, கொட்டிடவே முடியாத அவங்க எண்ணங்களைப் பகிர்ந்துக்கத்தான். ஒரு சிலர்தான் எல்லை மீறிடறாங்க. இதனால பொதுப்படையா எல்லாருக்கும் கெட்டபேரு. இன்னொன்னு, ஸ்பரிசமும் அதன் பரிமாற்றமும்கூட காதல்ல ஓர் அங்கம். ஆனா அது பப்ளிக்கா இருக்கறது மகா தப்புதான். அந்த ஒரு சிலர்தான் இதையும் செய்றாங்



சென்னை ஸ்பென்சர் பிளாசாதான் இன்றைக்கு இளைஞர்களின் கனவுலகம். இங்கிருக்கும் லேண்ட் மார்க் புத்தகக் கடையில் ஆண், பெண் என்று அள்ளுகிறது கூட்டம். குறிப்பாக 'ரொமான்ஸ்' செக்‌ஷனில் அடி பின்னுகிறது. காதல் கவிதைகளில் தொடங்கி, பணக்காரரை திருமணம் செய்துகொள்வது வரை பல்வேறு தலைப்புகளில் புத்தகங்கள். துணை மேலாளர் விவியனிடம் பேசினோம்.

''வெரைட்டியான புத்தகங்கள்,

பசங்க இந்தப் புத்தகங்கள்ல தொடறதே இல்ல. அவங்க வேற கலாசாரத்துக்கு மாறிட்டாங்க. இதையே இங்கிலீஷ்ல படிக்க றாங்க, அவ்வளவுதான் வித்தியாசம். ரொம்ப மோசமாவும் இல்லாம, ரொம்ப ஓவராவும் இல்லாம நிதானமான விற்பனை இருக்கு. ஒண்ணு மட்டும் உறுதியா சொல்வேன், புத்தகம் படிச்செல்லாம் யாரும் கெட்டுப்போக மாட்டாங்க!''

கன்றத நீங்க புரிஞ்சுக்கங்க...''

- ப்ரியா, ரவி இருவரும் விட்டுக் கொடுக்காமல் பேசிக்கொண்டே சென்றனர்.

எது எப்படியோ... புத்தகம், சினிமா, எஸ்.எம்.எஸ். என்று சீரழிந்து சின்னா பின்னமாகி குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடக்கும் காதலுக்குத் தேவை உடனடி சிகிச்சை.

- நிரஞ்சனா

அட்டையில்... மனமொத்து திருமணம் முடித்து ஜெர்மனியில் வசிக்கும் தம்பதி சதீஷ் - காஞ்சி

அட்டைப் படம்: ஸ்ரீஹரி


* விவியன்

வெரைட்டியான ரீடர்ஸ். இதெல்லாம் படிச்சு இவங்க எவ்வளவு தூரம் ஃபாலோ பண்ணுவாங்கன்னு தெரியல. ஆனா, படுவேக விற்பனையைப் பார்க்கும்போது காதல், ரொமான்ஸ் எல்லாம் எங்கே போய்ட்டிருக்குன்னு புரியல. எது நடந்தாலும் நல்லதா இருந்தா சந்தோஷம்தான்'' என்றார்.



# கறுப்புப் பணம் பற்றிப் பேச...

மதுரை இடைத்தேர்தல் முடிந்த கையோடு விஜயகாந்த் அவரது 150வது படமான 'எம்.ஜி.ஆர்' வேலைகளில் பிஸியாகிவிட்டார். தேர்தல் முடிவு மற்றும் தமிழக அரசியல் நிலவரம் குறித்து நம் கேள்விகளுக்குப் பொறுமையாகவும் அழுத்தமாகவும் பதிலளித்தார்.

**'சிவாஜி' படத்தில் கறுப்புப் பணத்தை ஒழிப்பது குறித்த கருத்துக்கள் இடம் பெற்றிருக்கின்றன. சினிமாக்காரர்களுக்குக் கறுப்பு பணத்தைப் பற்றிப் பேச அருகதை இருக்கிறதா என்ன?**

''நிச்சயமாக இருக்கிறது. இன்று கறுப்புப் பணம் அதிகமாகப் புழங்குவது அரசியல்வாதிகளின் கைகளில்தான். திரைப்படத் துறையில் உள்ளவர்கள் இன்றைக்கு முறையான கணக்கு வழக்குகளைத் தாக்கல் செய்யும் நடைமுறைக்கு வந்துவிட்டார்கள். ஆனால், அரசியல்வாதிகள் லஞ்ச ஊழலில் ஊறித் திளைத்து கறுப்புப் பணத்தைச் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அரசியல்வாதிகளைப் பார்த்து அதிகாரிகளும் லஞ்சம் வாங்குகிறார்கள். லஞ்ச ஊழல் ஒழிப்பு அதிகாரிகள்கூட தங்களுக்கு ஒரு வேலை நடக்க வேண்டுமென்றால் லஞ்சம் கொடுக்க வேண்டிய நிலை இன்று இருக்கிறது. தலை சரியாக இருந்தால்தான் கீழே வரை எல்லாம் சரியாக இருக்கும். இங்கே



# ...சினிமாக்காரர்களுக்கு அருகதை இருக்கிறதா?

## –பொளந்து கட்டுகிறார் விஜயகாந்த்

தலையே சரியில்லை. மக்களோடு மக்களாக இருப்பவன்தான் நடிகன். வறுமையில் வாடும் ஒரு கதாநாயகனாக நடிக்கும் நடிகன், வறுமையைப் பற்றிய எல்லா பரிமாணங்களையும் தெரிந்து கொள்கிறான். 'அரிதாரம் பூசியவன் நாடாள ஆசைப்படலாமா?' என்று கேட்கிறார்கள். 1956ல் முரசொலியில் கலைஞர் அழகான முகத்துடன் உணர்ச்சிகளைக் காட்டி நடிக்கும் நடிகன் நாடாள முடியாதா? என்று காமராஜரைக் கிண்டல் செய்யும் விதமாக எழுதியதையும் உங்கள் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். அரிதாரம் பூசும் விஜயகாந்தும் மனிதன்தானே! சமூகத்தில் உள்ள துயர்களும், வேதனைகளும் அவனுக்குத் தெரியாதா என்ன? அதற்கு முடிவு கட்டும் விதத்தில் செயல்படுவதில் என்ன தவறு இருக்கிறது?''

**விருத்தாசலத்தில் நடந்த கடுமையான எதிர் பிரசாரத்தையும் மீறி வென்றீர்கள். ஆனால், நீங்கள் நினைத்ததுபோல் தொகுதிக்கு ஏதாவது செய்ய முடிகிறதா?**

''தொகுதி நிதியில் முழு அளவுக்குக் காரியங்களைச் செய்து வருகிறேன். ஆனால், வேறு பல தடைகளும் இருக்கின்றன. என் சொந்தப் பணத்தில் இருபது சாலைத் தடுப்புகள் செய்து பல மாதங்களாக வைத்திருக்கிறேன். பள்ளிக்கூடங்கள் மற்றும் மருத்துவமனைகள் அருகில் வைக்கத் தயாரானவை அவை. ஆனால், அவற்றை வைக்க அனுமதி தர இழுத்தடிக்கிறார்கள். மூன்று தடவை முதல்வரிடமே பேசியிருக்கிறேன். விஜயகாந்த் என்ற தனிப்பட்ட நபரின் மீது கோபம் காட்டுவதால் சமுதாயத்துக்குச் செய்ய வேண்டிய நல்ல பணிகள் பாதிக்கப்படுகின்றன. அதே போல ஐந்து லாரிகளில் குடிதண்ணீர் தர ஏற்பாடு செய்தேன். ஆனால், என்.எல்.சி.யில் தண்ணீர் எடுத்து விநியோகிக்க அனுமதி தர மறுக்கிறார்கள். இப்படிப் பல தடைகள் இருந்தும் என்னால் முடிந்த வரை பணிகளைத் தொடர்வேன். தொகுதிப் பிரச்னைகள் குறித்து எல்லா அமைச்சர்களையும் சந்தித்து மனுக்கள் கொடுத்துள்ளேன்.''

**'தேர்தல் கமிஷன் கெடுபிடிகளையும் தாண்டி மத்திய, மாநில அரசுகளின் சாதனைகளுக்காக மக்கள் மதுரை மேற்கில் காங்கிரஸை வெற்றி பெற வைத்திருக்கிறார்கள்' என்று தி.மு.க.வினர் சொல்**



கிறார்களே!

''நல்ல வேடிக்கை. பதினைந்து கோடிக்கும் அதிகமாக செலவு செய்தல்லவா தி.மு.க வெற்றியை வாங்கியிருக்கிறது. அரசியலில் எளிமையை கடை பிடிக்க வேண்டும் என்று காந்தியடிகள் மதுரையில்தான் அரையாடைக்கு மாறினார். ஆனால், தி.மு.க.வினர் காந்தி படம் போட்ட நோட்டைக் கொடுத்துத்தானே வோட்டை வாங்கியிருக்கிறார்கள். தொகுதியில் சந்துக்கு சந்து அமைச்சர்கள் உட்கார்ந்துகொண்டு ரேஷன் கார்டைப் பார்த்து நோட்டுகளை வினியோகித்தார்கள். அதற்கு ஆதாரம் இருக்கிறது. பொதுவாக இடைத் தேர்தல் என்றால் அமைச்சர்கள் பிரசாரம் செய்யக் கூடாது. நாகர்கோவில் இடைத்தேர்தல் நடந்தபோது அண்ணா அவர்கள் 'அமைச்சர்கள் போக வேண்டாம்' என்றார். ஆனால், அப்போதும் அங்கே போனவர் கலைஞர். இது இன்றுவரை தொடர்கிறது. எனக்கு ஒரே ஆறுதல், மக்களுடைய பணம் மக்களிடமே சென்றடைகிறதே என்பதுதான்.''

**அழகிரியின் அதிகார மையத்துக்கு இந்த வெற்றியின் மூலம் மக்கள் அங்கீகாரம் கொடுத்து விட்டதாக நினைக்கிறீர்களா?**

''இது பணபலம், அராஜகம் அதிகார பலத்துக்குக் கிடைத்த வெற்றி. கௌரவப் பிரச்னையாக எடுத்துக் கொண்டு, ஆளும் கட்சி வெற்றியை வாங்கியிருக்கிறது. நீங்கள் குறிப்பிடும் நபர் கிங் மேக்கரா, அசைக்க முடியாதவரா என்பதெல்லாம் கட்சி ஆட்சியில் இல்லாதபோதுதான் தெரிய வரும்.''

**ஒவ்வொரு தேர்தலிலும் மூன்றாவது, இரண்டாவது இடம் என்று உங்கள் கட்சி பெறும்போது சலிப்பு தோன்றவில்லையா?**

''அது எப்படித் தோன்றும்? கட்சித் துவங்கி இரண்டு வருடங்கள்தானே ஆகிறது. ஒவ்வொரு தேர்தலிலும் முன்னேற்றம்தான். 1949ல் கட்சி துவங்கிய தி.மு.க. 1967ல் தானே பதவிக்கு வர முடிந்தது. எனக்கு தெய்வத்தின் மீதும் மக்களின் மீதும் நம்பிக்கை உண்டு. என்னுடைய பலம் இளைஞர்கள். இரு கழக அரசியலைப் பார்த்து வெறுப்புற்று இருக்கும் மக்கள், என் பக்கம் இருக்கிறார்கள். வறுமை மற்றும் ஊழல் ஒழிப்பு என் அசைக்க முடியாத கொள்கை.''

**உங்கள் கட்சியில், உங்கள் மனைவி மற்றும் மைத்துனர் ஆதிக்கம் அதிகமாக இருப்பதாகச் சொல்லப்படுகிறதே...!**

''என் மனைவி ஒவ்வொரு தேர்தலிலும் என்னுடன் கடுமையாக உழைக்கிறார். சொல்கிறவர்கள் பலவிதமாகச் சொல்வார்கள் இங்கே விஜயகாந்துக்குத் தெரியாமல் அணுவும் அசையாது. கட்சி நலன், தொண்டர்களின் மனநிலை எல்லாவற்றையும் அறிந்துதான் செயல்படுகிறேன்.''

**உங்கள் அடுத்த இலக்கு?**

''சந்தேகமென்ன... 2009 பாராளுமன்றத் தேர்தல்தான். தே.மு.தி.க. எதிர்காலத் தமிழர்களின் நம்பிக்கை நட்சத்திரம். இன்றைய அரசியலில் சொத்து சம்பாதிப்பதே இலட்சியமாக உள்ளது. ஆனால், கல்யாண மண்டபம் உட்பட சொத்துக்களை இழந்து கட்சி நடத்துபவன் நான் ஒருவன்தான்!''

**- ப்ரியன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## ஹீப்ரு முறையில் 100% ஜாதக கணிப்பின் மூலம்
# நீங்கள் நினைப்பதை அடையலாம்.

**வெற்றி கண்டவர்கள்**

RAJINIKANT - நியூமராலஜி எண் - 23 - ஹீப்ரு எண் - 24
KUSHBOO- நியூமராலஜி எண் - 32 - ஹீப்ரு எண் - 37
SARAVANAA- நியூமராலஜி எண் - 21 - ஹீப்ரு எண் - 37
ANBU- நியூமராலஜி எண் - 14 - ஹீப்ரு எண் - 46
VIKRAM- நியூமராலஜி எண் - 16 - ஹீப்ரு எண் - 42

இப்படிப்பட்ட எண்களின் அதிர்ஷ்டத்தால்தான் இவர்கள் எல்லோரும் புகழ், அழகு, வசீகரம் என போட்டா போட்டி போட்டு முன்னேறுகிறார்கள்.

**தோல்வி கண்டவர்கள்**

SRINIVASAN - நியூமராலஜி எண் - 28 - ஹீப்ரு எண் - 35
BABU - நியூமராலஜி எண் - 11 - ஹீப்ரு எண் - 62
JAYANTHI - நியூமராலஜி எண் - 19 - ஹீப்ரு எண் - 26
SANTHI - நியூமராலஜி எண் - 19 - ஹீப்ரு எண் - 43
MOHAN - நியூமராலஜி எண் - 22 - ஹீப்ரு எண் - 53

இப்படிப்பட்ட எண்களின் துரதிஷ்டத்தால்தான் இவர்கள் எல்லோரும் இன்றும் கஷ்டப்பட்டு நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதிர்ஷ்டம் உள்ளவராக வர வேண்டுமென்றால் அதற்கு நீங்கள் நல்ல வழிமுறை ஹீப்ரு நியூமராலஜிதான்.



அதற்கான வழிமுறைகள்தான் ஹீப்ரு நியூமராலஜி, ஜெம்மாலஜி மற்றும் வாஸ்து, ஹீப்ரு முறையின் மூலம் தீராத கடன், வியாபார நஷ்டம், கணவன்_மனைவி உறவு முறை சீர் செய்தல், மகப்பேறின்மை, உடல் வியாதிகள் மற்றும் மனித வாழ்வின் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் 100 சதவீதம் தீர்வு காண முடியும். இது முழுமையாக எப்பொழுது சாத்தியம் என்றால் பிரச்சினைக்கு உரியவர் ஜாதகத்தை ஆராய்ந்து, கிரகங்களின் நிலைகள் மற்றும் அவை தரும் சுப, அசுப பலன்கள் அவை எந்த காலங்கள் என்பவைவற்றைத் துல்லியமாக ஆராய்ந்து, எந்த கிரகம் ஜாதகருக்குத் துணை செய்யும் என்பதைக் கணக்கிட்டு அதன் அடிப்படையில் ஹீப்ரு முறையின் மூலம் நியூமராலஜி மற்றும் ஜெம்மாலஜியை பரிந்துரை செய்தால் நிச்சயமாக அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண முடியும்.

**J.HELEN GEE** (Hebrew Pyramid)
Astrologer, Expert Numerologist,
Gemmologits, Vasthu Constultants

**TABETHAA ASTROLOGY CENTRE**
# 45/21, Halls Road, Kilpauk,
(Opp.Kilpauk Telegraph Office), Chennai - 600 010. Ph: (0)42182627, Cell:98410 32545

*மண்ணில் நல்ல வண்ணம் வாழ எங்களை அணுகுங்கள்!*

---

# உங்கள் பழைய பட்டுப் புடவையை கொடுத்து ஒரு கிராம் போஃமிங் நகையை பெற்றுச் செல்லுங்கள்!

## ANNIVERSARY DISCOUNT SALE

**Genuine Discount upto 25%**



எங்களிடம்
1 கிராம் செயின்கள் / வளையல்கள்,
குந்தன், போல்கி, விக்டோரியன், முத்துக்கள்,
ஜிர்கான் மற்றும் பேன்சி வகைகள்
ஏராளமாய் கிடைக்கின்றன.

# TARA'S JEWELLERY

New No. 93. (Old No. 47), Kutchery Road, Mylapore, Chennai - 4.
(Between Mylapore Post Office & Jain Temple) **Phone: 2464 1799**



✱ கௌரி மீனாட்சி

**அ**டுத்து சொல்லப் போகிறவர் 'பல்' உள்ள அனைவருக்கும் பழக்கமான பெயர். நகைச்சுவை எழுத்தாளர் **சென்னிமலை சி.பி.செந்தில்குமார்.**

''என்னுடைய ஜோக்குகள் அதிகமாக கல்கியில் வந்ததில்லை. ஆனாலும் நான் கல்கியை நேசிக்கிறேன். காரணம் கல்கியில் வெளியாகும் ஜோக்குகளில் எப்போதும் தரம் இருக்கும். 'யாரையும் புண்படுத்திவிடக் கூடாது, எந்த ஒரு வார்த்தையிலும் இரட்டை அர்த்தம் வந்துவிடக் கூடாது' என்பதில் கவனமாக இருக்கும் விதம் பிரமிக்க வைக்கிறது. டாபிக்கலான ஜோக்குகளை அதிகமாக வெளியிடுங்கள்'' என்றார்.

# கல்கி தரும் கௌரவம்!

**ஹ**லோ வாசகர்களே,

இது உங்கள் அபிமான தித்திக்கும் திங்கள், இதோ உங்கள் கருத்துக் கோப்புகள்; வண்ண எண்ணங்கள்.

''கல்கியில் வரும் மருத்துவக் கட்டுரைகள் மிகவும் பயனுள்ளவையாக இருக்கின்றன. தன்னம்பிக்கைக் கட்டுரையையும் ஒரு பக்கக் கதைகளையும் அதிகம் எதிர்பார்க்கிறேன். இளைஞர்களையும், மாணவ - மாணவிகளையும் கவரும் வகையில் கல்லூரிகளுக்கு விஜயம் செய்து அவர்களின் எண்ணங்கள், படைப்புகளைப் பெற்று கல்கியை அலங்கரிக்கலாம்.''

சொன்னவர் **மதுரை, கௌரி மீனாட்சி.** ஆசிரியையாகப் பணிபுரியும் இவர், கல்கியில் பல்வேறு சமயங்களில் கடிதங்கள், துணுக்குகள் எழுதியிருக்கிறாராம்.



✱ ஜானகி

* சி.பி.செந்தில்குமார்



# தித்திக்கும் திங்கள்!

"கல்கியை வாங்கியதும் முதலில் படிப்பது 'நீங்கள் கேட்டவை' பகுதியைத் தான். மற்ற பத்திரிகைகள் வெளியிடும் 'கேள்வி பதில்' பகுதிகள் பெரும்பாலும் நடிகைகளிடையே ஒப்பீடு, அசட்டுத்தன மான நகைச்சுவை, மேம்போக்கான கருத்து என்றிருக்கையில் தராசுவிடம் மட்டுமே துணிச்சலைப் பார்க்க முடிகிறது."

- இப்படிச் சொன்னவர் **திருவண்ணாமலை என்.சண்முகம்.** இவரை சகலகலா சண்முகம் என்று சொல்லலாம். இவர் பெயர் வராத பத்திரிகையே இல்லை.



* என்.சண்முகம்

அது மட்டுமா? தொலைக்காட்சிகளில் ஜோடிப் பொருத்தம், சூப்பர் குடும்பம் உள்ளிட்ட பல்வேறு நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு வெற்றி பெற்றிருக்கிறார்.

'எப்படி சார் உங்களால் நேரம் ஒதுக்க முடியுது?' என்று கேட்டால், கடகடவென பட்டியலிடுகிறார்.

"காலையில ஐந்து டூ ஏழு பத்திரிகைகள் படிக்கிறது; அப்புறம் வானொலி கேட்கறது. வேலை முடிந்து வந்ததும் தொலைக்காட்சி, மறுபடியும் வாசிப்பு. முடியும்னு நினைச்சா எல்லாத்துக்கும் நேரம் ஒதுக்கலாம். என்னோட மனைவியும் நிறைய ஒத்துழைப்பாங்க" என்றார்.

அடுத்து தொடர்புகொண்டது **பாளையங்கோட்டை ஜானகியை.** "கல்கியை கையில் வைத்திருப்பதே கௌரவம். வேறு பத்திரிகையில் பெரிய படைப்பு வந்ததைச் சொன்னால்கூட சாதாரணமாக எடுத்துக்கொள்ளும் அக்கம் பக்கம், கல்கியில் ஒரு கடிதம் வந்தது என்று சொன்னால் 'நிஜமாவா?' என்று கேட்டு நம்மை பிரமிப்பாகப் பார்ப்பார்கள். அதுதான் கல்கி பெற்றுத் தரும் கௌரவம்" என்றார்.

அருள்வாக்கு பகுதியை விரும்பிப் படிப்பதாகச் சொன்னவரிடம் "இந்த வாரம் அருள்வாக்கில் 'சௌகரியம் இருக்கிறது என்பதற்காக தேவைக்கு மேல் வசதியைச் செய்துகொள்ளாமல் சாதாரணமாக இருக்க வேண்டும்' என்று மகாசுவாமிகள் சொல்கிறாரே, நடைமுறையில் இப்படி இருக்க முடியுமா?" என்று கேட்டோம்.

"முழுசா அப்படி இருக்க முடியாது. ஆனாலும் நம்மால் முடிந்த உதவியை மற்றவர்களுக்குச் செய்ய முடியுமே, இந்த மாதிரி நல்ல சிந்தனை, நல்ல விவாதத்தை ஏற்படுத்தறதுதான் கல்கியின் சிறப்பு" என்றார்.

நன்றி வாசகர்களே, மீண்டும் அடுத்த வாரம் சந்திப்போம். ○



# கல்கி



2007 ஜூலை 15
சர்வஜித் ஆனி 31
மலர் : 65
இதழ் : 50

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
*- பாரதியார்*

## நடந்து முடிந்த தேர்தலும் நடக்கப்போகும் தேர்தலும்

இடைத்தேர்தலில் ஆளுங்கட்சி வெற்றி பெறுவதென்பது கடினம். இதுவரை நடந்த ஆட்சி மீது அதிருப்தி கொண்டு எதிர் அணிக்கே மக்கள் வாக்களிப்பது இயல்பு. மதுரை மேற்கில் இந்த நிலை மாறுபட்டு, அ.தி.மு.க.வுக்கு, போன தேர்தலை விடவும் குறைவாக வாக்குகள் பதிவாகியுள்ளன. விஜயகாந்த் கட்சி, வாக்குகளில் தன் பங்கைக் கணிசமாக உயர்த்திக் கொண்டிருக்கிறது. இந்த இரண்டு எதிர்கட்சிகளின் ஒட்டுமொத்த வாக்குகளை விடவும் மிக அதிகமாகப் பெற்று, தி.மு.க. கூட்டணி அமோக வெற்றி பெற்றுள்ளது. அ.தி.மு.க.விடமிருந்து இந்தத் தொகுதியை காங்கிரஸ் பறித்துக் கொண்டும் விட்டது.

இந்நிலையில், எதிர்கட்சித் தலைவர் ஜெயலலிதா, தி.மு.க. கூட்டணியின் வெற்றியை கௌரவமாக ஆமோதிக்காததுகூட ஆச்சர்யமில்லை; அதை அவரிடம் எதிர்பார்க்க முடியாது என்று கடந்த கால அனுபவங்கள் உணர்த்துகின்றன.

ஆனால், வெற்றி பெற்ற தி.மு.க. அணித் தலைவர், அமைதியாகவும் நேர்மையாகவும் தேர்தலை நடத்த அரும்பாடுபட்ட தேர்தல் கமிஷனுக்கு உரிய ஆமோதிப்பை வழங்குவதற்குப் பதிலாக, அதனைக் குறை கூறி அதன் நேர்மையையே கேள்விக் குட்படுத்தியிருப்பதுதான் அதிசயமான வேதனை! கமிஷன் ஒரு தலைபட்சமாக நடந்து கொண்டிருந்தால், இவ்வளவு பெரிய வெற்றி தி.மு.க. அணியினருக்கு எவ்வாறு கிட்டியிருக்கும்?

முதல்வரின் பாய்ச்சல், வெற்றிப்படிகளின் உச்சியில் இடறி விழுந்ததுபோலாகிவிட்டது.






தன்னதிகாரம் பெற்ற ஜனநாயக அமைப்புகளின் மேலாண்மையை மதித்து ஏற்கும் பக்குவம் நம் அரசியல்வாதிகளுக்கு என்றுதான் வரப்போகிறதோ!

குடியரசுத் தலைவர் பதவிக்கு முற்றிலும் தகுதிபடைத்த அறிஞர்களையும் நன்மக்களையும் ஒதுக்கிவிட்டு, சர்ச்சைகளின் உறைவிடமான ஒரு வேட்பாளரை, ஆளும் கூட்டணி நியமித்திருப்பது மிகவும் கொடுமை!

பிரதிபா பாடீல் மீதும் அவரது சுற்றத்தார் மீதும் புற்றீசலாகக் குற்றச்சாட்டுகள் கிளம்பிய வண்ணம் இருக்கின்றன. இந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்துமே பொய் என்று அவர் சார்பில் காங்கிரஸ் தலைவர்கள் மறுப்பு வெளியிடும்போதே, மீடியா அக் குற்றச்சாட்டுகளுக்கான ஆதாரங்களைப் பிட்டுப் பிட்டு வைத்துக் கொண்டிருக்கிறது! இதற்கிடையே விருந்து, பேரணி, கொண்டாட்டம் என்று இந்த வேட்பாளருக்கு ஆதரவு திரட்டும் முயற்சிகள் அருவருப்பூட்டி, கௌரவமும் நடுநிலையும் மிக்க நாட்டின் முதல் குடிமகன் பதவிக்கே இழுக்கு செய்கின்றன!

'மனசாட்சிப்படி வோட்டுப் போடுங்கள்' என்று பா.ஜ.க. அணி வேட்பாளர் ஷெகாவத் கேட்டுக் கொண்டிருக்கிறார். அது எப்படி சாத்தியம் என்பதுதான் கேள்விக்குறி!

ஒரு வேட்பாளர், குற்றச்சாட்டு மழையில் தத்தளிக்க, எதிர் வேட்பாளர் ஹிந்துத்வா கோட்பாடுகளின் ஆதரவாளர்! அவரிடம் நடு நிலைமையையோ கட்சி மற்றும் மதம் கடந்த தெளிந்த பார்வையையோ எவ்வாறு எதிர்பார்ப்பது? மனசாட்சிப்படி வாக்களிப்பதானால் இருவரையுமே நிராகரிக்கத்தான் முடியும்.

குடியரசுத் தலைவரைத் தங்கள் கைப்பாவையாக்கிக் கொண்டு, தட்டிக் கேட்பார் இல்லாமல் தங்கள் கொட்டத்தைத் தொடர்வதற்கான திட்டத்தை அரசியல்வாதிகள் தீட்டியிருப்பது தெளிவு. அதனை முறியடிக்க முடியாவிட்டாலும் அது குறித்த விழிப்புணர்வு பெற்று எச்சரிக்கையாக இருப்பது மக்களின் பொறுப்பு! ●

# மரணத்திலும் முந்திய ஜீவா!

இயக்குனர் ஜீவாவின் திடீர் மரணம் ஒட்டுமொத்த தமிழ்த் திரை உலகத்தையே அதிர்ச்சிக்குள்ளாக்கி இருக்கிறது. ஜீவா பற்றிய நினைவுகளை நம்மிடம் பகிர்ந்து கொண்டார் ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்த்.

"பி.சி.ஸ்ரீராமிடம் நான் சேர்ந்தபோது, அவருடைய முதல் அசிஸ்டென்ட் ஜீவா. நான் ஆறாவது அசிஸ்டென்ட். சீனியாரிட்டி, மரியாதை எல்லாம் அதிகம் பார்க்கும் சினிமா உலகத்தில், முதல் நாள் ஜீவாவை 'சார்' என்று நான் அழைத்த போது, 'இந்த சாரெல்லாம் வேண்டாம்! என்னை ஜீவா என்றே கூப்பிடு' என்று சொன்னது ஆச்சரியமாக இருந்தது. ஒரு பத்திரிகை புகைப்படக்காரர் என்ற அந்தஸ்தில் இருந்து விட்டு, சினிமாவுக்குப் போன என்னை, ஆறாவது அசிஸ்டென்ட் தானே என்று கொஞ்சம் அலட்சியப் படுத்தி இருந்தாலும், ஒரு சில மாதங்களிலேயே நான் சினிமாவில் தொடர்வது பற்றி மறுபரிசிலனை செய்திருப்பேன். ஆனால் அப்படி நேராமல், என்னை கௌரவமாக நடத்தி, சினிமா உலகில் நான் அழுத்தமாகக் கால் ஊன்றக் கைகொடுத்தவர் ஜீவாதான்.


* கே.வி.ஆனந்த்

எந்த விஷயமானாலும் அப்புறம் பார்க்கலாம் என்று இழுத்தடிக்கும் பழக்கம் ஜீவாவுக்குக் கிடையாது. சட் சட்டென்று முடிவுகள் எடுப்பார். எந்த ஒன்றானாலும் திட்டமிட்டுச் செயல்படுவார். ஐம்பது நாள் ஷூட்டிங் என்றால், எடுக்க வேண்டிய அனைத்தையும் நாற்பத்தெட்டாவது நாளே முடித்துவிடுவார். அதனாலேயே தயாரிப்பாளர்களுக்கு ஜீவாவை மிகவும் பிடிக்கும். பிரியதர்ஷன் போன்ற பெரிய இயக்குனர்களின் ஃபேவரிட் ஒளிப்பதிவாளர் என்றாலும்கூட, அறிமுக இயக்குனர்கள் படங்களிலும் எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் பணியாற்றுவார். ஷங்கர், எஸ்.ஜே.சூர்யா, லிங்குசாமி ஆகியோரது முதல் படங்களுக்கு இவர்தான் ஒளிப்பதிவாளர். சரியான கட்டத்தில் இயக்குனராகி, தமக்கென்று ஒரு புதிய ஸ்டைலை அமைத்துக்கொண்டு ரசிகர்களை, குறிப்பாக இளைய தலைமுறை ரசிகர்களை மிகவும் கவர்ந்து விட்டார். மூன்றே படங்களில் தமக்கென்று ஒரு இமேஜை ஏற்படுத்திக் கொண்டு, ரசிகர்கள் மத்தியில் ஏராளமான எதிர்பார்ப்புகளை ஏற்படுத்தியவர். நிறைய சாதிக்கணும் என்கிற ஆசை கொண்டவர். அதனாலேயே இடைவெளி இல்லாமல் உழைப்பார். 'உன்னாலே உன்னாலே' படம் இங்கே சென்சார் ஒப்புதலுக்குப் போனபோது, அவர் ரஷ்யாவில் அடுத்த படத்தின் ஷூட்டிங்கில் இருந்தார்! இதற்கிடையே ஹைதராபாத்தில் ஒரு தெலுங்கு படத்துக்கும் பணியாற்றினார். எதிலுமே ரொம்ப ஃபாஸ்ட்; அதனால்தான் மரணம் கூட அவர் விஷயத்தில் ரொம்ப ஃபாஸ்டாகவே வந்து விட்டது'' என்கிறார் கே.வி.ஆனந்த்.


* ஜீவா

- கௌதம்



சோ

எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

## மஹாபாரதம்

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங் களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

## வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிஹாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்தி லுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார்விலை ரூ.120/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. | இந்து தர்மம் | 65.00 |
| 3. | வந்தே மாதரம் | 115.00 |
| 4. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. | மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. | ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. | புரட்சி கீதை | 35.00 |
| 21. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. | சத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. | ஏன் கூடாது? | 40.00 |
| 34. | இரவில் சென்னை | 40.00 |
| 35. | முகமது பின் துக்ளக் | 35.00 |
| 36. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. | எதற்காக? | 35.00 |
| 39. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்மைல் ப்ளீஸ் | சத்யா | ரூ. 40.00 |
| 2. | அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | " | ரூ. 40.00 |
| 3. | நையாண்டிக் கட்டுரைகள் | " | ரூ. 40.00 |
| 4. | அரசியலும் நகைச்சுவையும் | " | ரூ. 32.00 |
| 5. | நாடு தழுவிய நகைச்சுவை | " | ரூ. 50.00 |
| 6. | மாடசாமியின் மனசாட்சி | " | ரூ.100.00 |

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)



ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at: Srinivasan@alliancebook.com

வாகனக் கடன், நகைக் கடன், சொந்தச் செலவுக்கான உடனடி ரொக்கக் கடன் ஆகியவற்றைவிட மிகவும் சுலபமாக நாம் பெறக்கூடிய கடன் வீட்டுக் கடன். அதனைப் பெறுவதற்கான நடைமுறைகள் இதோ:

★ வீட்டு மனை வாங்க, புதிய மற்றும் பழைய வீடு வாங்க, புதிய மற்றும் பழைய அடுக்கு மாடி வீடு (flat) வாங்க, இருக்கும் வீட்டைப் புதுப்பித்துக் கட்ட, வர்த்தக வளாகம், அலுவலகங்கள் கட்டுவதற்கு என்று பல விதங்களில் எல்.ஐ.சி. எச்.எஃப்.எல்., ஹெச்.டி.எஃப்.சி. மற்றும் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள், தனியார் நிறுவனங்கள் மூலம் கடன் கொடுக்கப்படுகிறது.

★ நிறுவனம் கேட்கும் டாக்குமென்ட்டுகளை எவ்வளவு விரைவில் கொடுக்கிறீர்களோ அவ்வளவு விரைவாகக் கடன் பெறலாம்.

★ புதிய மனை என்றால் விற்பனை செய்யப்படும் இடத்தின் ஒரிஜினல் பத்திரம், தாய்ப் பத்திரம், பட்டா, வில்லங்கச் சான்றிதழ், அங்கீகரிக்கப்பட்ட லே-அவுட் ப்ளான் ஆகியவற்றைக் கட்டாயம் நிறுவனங்களின் பரிசீலனைக்குக் கொடுக்க வேண்டும்.

★ புதிய அடுக்குமாடி வீடு வாங்க வேண்டுமென்றால் பிரமோட்டருடன் போட்ட விற்பனை ஒப்பந்தம், நில உரிமை தொடர்பான விற்பனைப் பத்திரம், தாய்ப் பத்திரம், அங்கீகரிக்கப்பட்ட லே-அவுட் ப்ளான், வில்லங்கச் சான்றிதழ்,

# வில்லங்கமில்லா வீட்டுக் கடன்!



நிலப் பட்டா ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும். பழைய அடுக்குமாடி வீடு மற்றும், தனி வீடு வாங்குவதற்கு, விற்பவர் வசம் உள்ள விற்பனைப் பத்திரத்தையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். தனி வீடு கட்டுகிறீர்கள் என்றால் அங்கீகரிக்கப்பட்ட மதிப்பீட்டாளரைக் கொண்டு செய்யப்பட்ட முறையான மதிப்பீட்டையும் இணைக்க வேண்டும்.



உங்களுடைய வயது மற்றும் திருப்பிச் செலுத்தும் தகுதி ஆகியவற்றை அடிப்படையாக வைத்தே கடன் கொடுக்கப்படுகிறது.

★ பழைய வீடு, பழைய அடுக்குமாடி வீடு வாங்கும்போது, அதன் பழைமைத் தன்மைக்கேற்ப மதிப்பு குறைக்கப்பட்டு, எதிர்பார்க்கும் கடன் தொகை குறைய வாய்ப்புண்டு.

★ சென்னை சி.எம்.டி.ஏ. எல்லைக்குள் அடுக்குமாடி வீடு கட்டும் பிரமோட்டர்களும், தனியாக வீடு கட்டுபவர்களும், லே-அவுட் ப்ளானின்படிதான் கட்ட வேண்டும்.

★ கடனுக்கான மனுப் போடும்போது நிறுவனங்கள் உங்கள் வருமானத்தை எடை போட வருமான வரிச் சான்றிதழ் (படிவம் 16) மற்றும் வங்கிக் கணக்கு (ஆறு மாதங்கள்) கேட்பார்கள். இது தவிர, உங்கள் சம்பளச் சான்றிதழையும் தர வேண்டும். நீங்கள் வீட்டுக்கு எடுத்துப் போகும் சம்பளம் (Take home) எவ்வளவு என்று பார்க்கப்பட்டு, அதில் மூன்றில் ஒரு பங்கைக் கடன் திருப்பிக்கட்ட ஒதுக்க முடியுமா என்று கணித்தும் கடன் வழங்கப்படும்.

★ உங்கள் தகுதிக்கு மீறிய வகையில் கடன் கேட்டால் இறுதியில் ஏமாற்றமே மிஞ்சும். உங்களுடைய வயது மற்றும் திருப்பிச் செலுத்தும் வசதி ஆகியவற்றை அடிப்படையாக வைத்தே கடன் கொடுக்கப்படுகிறது.

★ ஒரு லட்சம் கடன் வாங்கும் பட்சத்தில் மாதம் ஒன்றுக்கு அசல் + வட்டியுடன் 1300 ரூபாய் கட்ட வேண்டியிருக்கும். அதிகபட்சமாக அறுபது வயது வரை கணக்கில் எடுத்துக் கொள்வார்கள். திருப்பிக் கொடுக்கும் காலம் அதிக பட்சம் இருபது ஆண்டுகள் ஆகும். வாங்கும் சொத்தில் எண்பது சதவிகிதத்துக்குக் கடன் கொடுக்கப்படும் என்றாலும், அதில் பல வரைமுறைகள் உள்ளன.

★ நீங்கள் வாங்க இருக்கும் சொத்தின் மதிப்பு ஒரு லட்ச ரூபாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் வயது ஐம்பது. கடன் வாங்கினால் பத்து வருட (120 மாதங்களில்) காலத்தில் திருப்பிச் செலுத்த வேண்டும். டேக் ஹோம் சம்பளம் கணக்குப்படி உங்களால் 800 ரூபாய் மாதம் கட்ட முடியும் என்றால், நிறுவனம் நிச்சயமாக எண்பது அல்லது தொண்ணூறு சதவிகிதம் வரை கடன் கொடுக்கும்.

★ கடன் தொகையும், திருப்பிக் கொடுக்கும் தவணைக் காலமும் சம்பந்தப்பட்ட நபரின் நிதி வசதியைப் பொருத்து மாற்றி அமைக்கப்படுவது உண்டு.

★ கடனுக்கு உண்டான வட்டி நிலையான வட்டி விகிதமா; அவ்வப்போது மாறும் (floating) வட்டி விகிதமா என்று தேர்ந்தெடுப்பது கடன் வாங்குபவரின் கையில்தான் இருக்கிறது.

- கௌசி

# ஹோமியோபதி - மாறுபட்ட மருத்துவ முறை

இன்றைய மருத்துவ முறைகள் யாவும் நோயின் உபாதைகளால், நாட்பட பூத உடலில் ஏற்படும் விளைவுகளை அடிப்படையாகக் கொண்டு சிகிச்சை அளிக்கப்படுபவைகளாகும். நோயின் அடிப்படைக் காரணத்தைச் சரிப்படுத்துபவை அல்ல. ஆனால், ஹோமியோபதி முறையில் கண் பார்வைக்கும், கருவிகளுக்கும் புலப்படாத, நமது உடம்பிலுள்ள அடிப்படை இயக்க சக்தியின் கோளாறுகளை சரிப்படுத்த, மருந்துப் பொருளிலுள்ள மின் அணு சக்தியை வெளிப்படுத்த மருந்துப் பொருளை மீண்டும், மீண்டும் ஆயிரக்கணக்கான முறை திராவகத்தில் கலக்கியும், குலுக்கியும், அத்தகைய மின் அணுசக்தியை மருந்தாக நோயாளிக்குக் கொடுக்கப்படுகிறது. உணவிலிருந்து ஜீரண சக்தியின் மூலம் வெளிப்படும் மின் அணு சக்தியை அயான்களாக (Ions) ஏற்று, அந்தச் சக்தியின் மூலம் உறுப்புகளை செயல்படுத்துவது, பிறப்பின் மூலம் நம் உடம்பில் உள்ள செல்களில் அமைந்துள்ள டைபால் (Dipole) என்னும் சேகரிக்கப்பட்ட அணுசக்தி பேட்டரிகளாகும் (Stored Energy Battries). சித்த வைத்திய முறையில் சொல்லப்படும் 'மின்சார ஆன்மா' எனப்படுவது இதுவே எனலாம். மருந்தில் அடங்கியுள்ள மேற்கூறிய சக்தி அயான்கள் (Energy Ions) நம் உடம்பில் உள்ள குறைபாடுள்ள மேற்கண்ட பேட்டரிகளால் ஈர்க்கப்பட்டு, அத்தகைய பேட்டரிகளை வலுப்படுத்துவதன் மூலம், பழுதுபட்ட உறுப்புகளை நன்கு செயல்படுத்தி, பக்கவிளைவின்றி நோயைத் தீர்க்க உதவுகின்றன. இத்தகைய முறை, கார் பாட்டரிகளை நாம் சார்ஜ் செய்யும் முறையைப் போன்றதாகும். நமது ஆயுளும், மிகவும் கவனத்துடன் பராமரிக்கப்பட்ட கார்பாட்டரிகளும், சில காலத்தில் நிராகரிக்கப்பட வேண்டியிருப்பது போல், நாம் அறிந்தபடி குறிப்பிட்ட காலமேயாகும்.

பல பிறவிகளில் பெற்றோர்கள் மூலம் பிறப்பால் தொடர்ந்து வரும் நோய்கள் பெரும்பாலும் மன பாதிப்புகளின் அடிப்படையில் ஏற்படுவதும், அமைவதும், துக்கம் வரும்பொழுது பசியின்மை, தூக்கமின்மை ஆகியவையும், சந்தோஷமாக இருக்கும்பொழுது நமது உடல் உபாதை குறைவதும் நாம் அனுபவத்தில் கண்டறிந்தவையாகும். மருத்துவப் பரிசோதனை மூலம் நிரூபிக்கப்பட்ட உடல் கோளாறுகளையும், மன இயல்புகளையும் மையமாகக் கொண்டு உடல் உபாதைகளைக் குணப்படுத்தும் ஒரே மருத்துவமுறை ஹோமியோபதியே ஆகும்.

வயது முதிர்ந்த ஒரு அம்மையாரின் ஒரு கண்ணில் பார்வை முற்றிலும் இழந்து, கண் மருத்துவரை அணுகிய பொழுது, பரிசோதித்த பின் சில அடிப்படைக் கோளாறால் 'காட்டரேக்ட்' (Cataract) அறுவை சிகிச்சை செய்தாலும் பார்வை வராது என்று மருத்துவர் சொல்லிவிட்டார். பின்பு பாண்டிச்சேரி அரவிந்த் ஆசிரமத்தில் பரிசோதித்த பின், இரத்தக் குழாய்கள் வறண்டு விட்டமையால் பார்வை திரும்ப வாய்ப்பில்லையென்றும், அடுத்த கண்ணும் பாதிக்கப்பட வாய்ப்புண்டு என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

இந்நிலையில் ஹோமியோபதியில் நோயாளியின் குணங்கள், விருப்பு வெறுப்புகள் மற்றும் வேறு அறிகுறிகளின் அடிப்படையில் 'செப்பியா' (Sepia) என்னும் மருந்து 30C வீரியத்தில் இரண்டு உருண்டைகளை ஒரு தம்ளர் தண்ணீரில் கலந்து, காலையும், மாலையும் ஒரு ஸ்பூன் சாப்பிட்டு, ஏழு நாட்களுக்குப் பின் முற்றிலும் பார்வையற்றிருந்த கண்ணின் மூலம் சுமார் 10 அடி தூரத்தில் இருந்து விரல்களை அந்த அம்மையாரால் எண்ண முடிந்தது. வேறு மருந்தும் கொடுத்த பின் பார்வை அறுவை சிகிச்சை இல்லாமலே கணிசமாக சரியாகி நன்றாக உள்ளது.

பங்களாதேஷிலிருந்து வந்து சென்னையிலுள்ள பிரபல மருத்துவமனையில் மூளைக் கட்டிக்காக 'ரேடியோ தெரபி' (Radio Therapy) சிகிச்சை பெற்று வந்த 9 வயதுப் பெண் தொடர்ந்து 5 மாதம் கடும் தலைவலியால் அவஸ்தைப்பட்டு

வந்தாள். உடலும் பருமனாகிக் கொண்டே வந்திருக்கிறது. ஒரு மாதம் மட்டுமே உயிர் வாழ முடியும் என மருத்துவர்கள் தெரிவித்திருந்தனர். மூளைக்கட்டி அபாயகரமான இடத்தில் இருந்ததால் அறுவை சிகிச்சையை தவிர்த்திருக்கிறார்கள்.

அந்தப் பெண்ணை எங்கள் மருத்துவமனைக்கு கைத்தாங்கலாக, பெண்ணின் தாய் அழைத்து வந்தாள். அந்தப் பெண்ணால் தானாக, நேராக நடக்க முடியவில்லை. நோய் அறிகுறிகளை தாயாரே கூற வேண்டியிருந்தது. சிறு வயது முதல் நோய் அறிகுறிகளையும், குணாதிசயங்கள், விருப்பு வெறுப்பு ஆகிய அடிப்படையிலும், ஏற்கெனவே விபத்தில் ஏற்பட்டதின் விளைவையும், அடிப்படையாகக் கொண்டு, Calcarca Carb 30c, Arnica 200c ஆகியவை தண்ணீரில் கலந்து மேற்கூறியபடி 5 நாட்கள் எடுத்துக் கொண்டபின், ஆறாவது நாள் அந்தப் பெண் புன்சிரிப்புடன் தானாகவே நடந்து மருத்துவரைப் பார்க்க வந்தாள். தலைவலி தொந்தரவுகள் மிகவும் குறைந்துவிட்டிருந்தது, உற்சாகமாக நோயின் அறிகுறிகளைச் சொன்னாள். ஒரு மாதத்திற்கு பின் எக்ஸ்ரே எடுத்ததில் மூளைக்கட்டி கணிசமாகக் குறைந்திருந்தது.

ஹோமியோபதி மருத்துவத்தால் பெரிதும் நன்மையடைந்த மின்பொறியாளர் திரு. வி.கே. ஆறுமுகம் அவர்களால் இந்த மருத்துவமனை 1995-ல் ஸ்தாபிக்கப்பட்டதாகும். இப்பொழுது தினமும், நீண்ட நாள் நோய்வாய்ப்பட்ட சுமார் 150 நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது. அநேகமாக ஒவ்வொருவரும் நோயின் தீவிரம் உடனே குறைந்து, நாட்பட முன்னேற்றமடைந்து வருகிறார்கள். சிக்குன்குனியா நோயாளிகள் உடனே வந்தவர்களுக்கு இரண்டே நாளில் குணப்படுத்தப்பட்டது. வேறு இடங்களில் சிகிச்சை பெற்று நாட்பட்ட பின் மூட்டுவலி ஆகியவற்றுடன் வந்த ஒவ்வொருவருக்கும் சுமார் 3 வாரங்களில் பரிபூர்ணமாகக் குணப்படுத்தப்பட்டது. மருத்துவர்களாலும், பயிற்சி மாணவர்களாலும் விரிவான முறையில் விசாரணை செய்து சிகிச்சையளிக்கப்படுகின்றது. கடந்த ஜனவரி மாதம் 19 வெளிநாட்டு ஹோமியோபதி மருத்துவர்கள் 12 நாட்கள் இங்கு பயிற்சி பெற்று, இங்குள்ள சிகிச்சை முறையை மிகவும் பாராட்டியிருக்கிறார்கள். அடுத்த ஆண்டு ஜனவரியில் சுமார் 50 பேர் வர இருக்கிறார்கள். மின்பொறியாளரான ஸ்தாபகர் இந்த மருத்துவ முறை பற்றி பல நூல்கள் ஆங்கிலத்தில் இயற்றியுள்ளார். ஹோமியோபதி எப்படி செயல்படுகிறது என்று கண்டறிந்து எழுதியிருப்பது இவர் மட்டுமே. இந்த மருத்துவ முறை அலோபதியில் மிகவும் தேர்ச்சி பெற்ற ஜெர்மனியைச் சேர்ந்த திரு. ஹனிமன் அவர்களால், மருந்தின் தன்மைகள் மனிதர்களின் பேரில் பரிசோதனைகள் மூலம் நிரூபிக்கப்பட்டு ஸ்தாபிக்கப்பட்டதாகும்.

மருத்துவர்களின் கவனக்குறைவாலும், குறிப்பிடப்பட்ட வழிமுறைகளை சரிவரப் பின்பற்றாததாலும், இச் சிகிச்சை முறை பெரும்பாலும் பலனளிக்காமல் போய்விடுகிறது. இருந்தாலும் இம்முறை உலகெங்கிலும் பரவியுள்ளது. உலகில் சில மருத்துவர்கள் மட்டுமே அற்புதமான முறையில் சிகிச்சை அளிக்கிறார்கள். இந்தச் சிகிச்சை முறை புரிந்து கொள்வது கடினம் என்பதால் இந்த வைத்திய முறை அறிவாளிகளுக்கு மட்டுமே உகந்த முறை என அலோபதியிலிருந்து வந்த கெண்ட் (Dr. Kent) என்ற புகழ்பெற்ற அமெரிக்க ஹோமியோபதி மருத்துவர் அபிப்ராயப்படுகிறார். ஆண்டவன் அருளால் மனித சமுதாயத்திற்கு கிடைத்த இந்த அற்புதமான மருத்துவ முறை ஒருகாலத்தில் உலகெங்கும் சிறந்த முறையில் வியாபிக்கப்படவுள்ளது என்பது உறுதி.

**VENKATESWARA HOMOEOPATHIC MEDICAL COLLEGE & HOSPITAL**

**V.K.ARUMUGAM, B.E., Correspondent and Managing Trustee,**
**Hahnemann Homoeopathic Medical Trust**
**6/177A, Mount Poonamallee Road, Porur, Chennai - 600 116.**

advt

மத்திய அமைச்சர் வயலார் ரவி, குருவாயூரில் நடந்த விவகாரம் முதல் தமது துறையான வெளிநாட்டு வாழ் இந்தியர்களின் பாதுகாப்புக்காக ஏற்படுத்தப் பட்டிருக்கும் பல திட்டங்கள் வரை நம்மிடம் மனம் விட்டுப் பேசினார். அவருடனான சந்திப்பிலிருந்து...

**குருவாயூர் கோயிலில் அப்படி என்னதான் நடந்தது?**



* குருவாயூர் கோயில்

# "யாருக்கும் உரிமை கிடையாது!"

''எனது பேரன் ராஜீவ் கிருஷ்ணாவுக்கு அன்ன பிராச்சனம் (முதல் முறையாக உணவு ஊட்டும் நிகழ்ச்சி) செய்வதற்காக நான், எனது மகன், மருமகள் மற்றும் பேரக் குழந்தையோடு குருவாயூர் கோயிலுக்குச் சென்று வந்தோம். நாங்கள் சென்று பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டுப் போன தினத்துக்கு மறுதினம், கோயிலில் புண்யாகவசனம் நடத்தி இருக்கிறார்கள். என் மகன் ஒரு 'இந்து' அல்ல என்று குற்றம் சொல்லி இதனைச் செய்திருக்கிறார்கள். நாங்கள் சென்றதால் கோயிலின் புனிதம் கெட்டுவிட்டதாம்! எனவே அதைப் புதுப்பிக்க வேண்டி 'புண்யாகவசனம்' நடத்தி இருக்கிறார்கள். இந்த நிகழ்ச்சி என்னையும் என் குடும்பத்தாரையும் மனதளவில் ரொம்பவே பாதித்து விட்டது. என் மனைவி கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர் என்பதால் எங்கள் மகன் இந்து அல்ல என்று குருவாயூர் கோயில் தேவஸ்தானம் காரணம் சொல்வதை எங்களால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

ஏழு வருடங்களுக்கு முன் எனது மகனின் திருமணத்தை முன்னிட்டு கோயிலுக்குச் சென்றபொழுதுகூட இதேபோல தான் 'புண்யாகவசனம்' செய்தார்கள். ஆனால், அப்பொழுது அந்த விவகாரத்தை விட்டுவிட்டோம். இந்த முறை நமது உரிமையை நாம் நிலைநாட்டிக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. குற்றம் என்று சொன்னது எங்களை ரொம்பவே வேதனைக்குள்ளாக்கி விட்டது. தெய்வ நம்பிக்கை இருப்பதால்தான் நாம் கோயிலுக்குச் செல்கிறோம். என் மகனை 'நீ இந்து அல்ல' என்று சொல்லக்கூடிய உரிமை யாருக்கும் கிடையாது.''

**வெளிநாட்டு வாழ் இந்தியர்களை மணக்கும் பல்லாயிரக்கணக்கான இந்**

**தியப் பெண்கள் சமீப காலமாக ஏமாற் றப்பட்டு வருவது அதிகரித்து வரு கிறதே?**

''இந்தியாவில் - குறிப்பாக, பஞ்சாப் மாநிலத்தில் இப்படி வெளிநாட்டு வாழ் இந்தியர்களை மணந்து, ஏமாற்றத்தைச் சந்தித்த பெண்கள் அதிகரித்து வருகின் றனர். இத்தகைய சம்பவங்கள் அதிகரிக் காமல் இருக்க மாநிலங்கள் தோறும் அவ் வப்போது பயிலரங்குகள் நடந்து வரு கின்றன. வெளிநாட்டில் வாழ்பவர்களை மணப்பதற்கு முன் என்னென்ன விஷயங் களை அறிந்துகொள்ள வேண்டும், பெற் றோர்கள் மேற்கொள்ள வேண்டிய தீவிர விசாரணை போன்றவற்றைப் பற்றிச் சொல்லி வருகிறோம். பாதிக்கப்பட்ட பெண்களிடமிருந்து புகார் வந்தால், வெளி நாடுகளில் உள்ள இந்தியத் தூதரகங்கள் அதனை உடனடியாகக் கண்காணித்து பெண்களுக்குப் போதுமான பண உதவி முதல் அனைத்து விதமான உதவிகளையும் செய்து வருகின்றன. புகாரில் குறிப்பிடப் பட்டவர் இந்தியப் பிரஜையாக இருந்தால் மட்டுமே எங்களால் நடவடிக்கைகள் எடுக்க முடியும்.''



✱ வயலார் ரவி

**வெளிநாட்டில் வேலை வாங்கித் தரு கிறேன் எனக் கூறி மோசம் செய்யும் ஏஜென்ட்களும் பெருகி விட்டார் களே...?**

''இதைப் போன்ற புகார்களும் எங்களுக்கு வந்துகொண்டுதான் இருக் கின்றன. இப்படி ஏமாற்றி வரும் ஏஜென்ட்களை அந்தந்த மாநில அரசுகள் தான் பிராஸிக்யூட் செய்ய வேண்டும். பாதிக்கப்பட்டவர்களும் உடனடியாகப் புகார்களை தெரிவிக்க வேண்டும். சப் ஏஜென்ட் ஸிஸ்டத்தை முற்றிலுமாக நிறுத்த வேண்டும் என்பதே என் விருப்பம்.''

**வெளிநாட்டு வாழ் இந்தியக் குடும் பங்களைச் சேர்ந்த குழந்தைகள் இந்தியா வைப் பற்றி அறிந்துகொள்ள என்ன முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது?**

''இந்தியாவை அறிந்து கொள்ளுங்கள் (Know India) என்ற ஒரு நிகழ்ச்சியை வெளி நாட்டு வாழ் இந்தியக் குழந்தைகளுக்காக நடத்தி வருகிறோம். சுமார் ஒரு மாத காலம் வெளிநாடுகளிலிருந்து குழந்தைகள் இந்தியாவுக்கு வந்து ஹிமாச்சல பிரதேசம், கேரளா போன்ற மாநிலங்களில் ஹோட் டல்களில் தங்காமல், வீடுகளில் தங்கி இந்தியாவைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள ஒரு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்து வருகிறோம். அவர்கள் நேரடி யாக கிராமங்களுக்குச் சென்று அங்கு பஞ் சாயத்து ராஜ் மற்றும் கிராமப்புற மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றித் தெரிந்து கொள்கிறார்கள். இந்த ஆண்டு 18 நாடு

# வெடிக்கிறார் மத்திய அமைச்சர் வயலார் ரவி

களிலிருந்து சுமார் 120 குழந்தைகள் இந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்டனர். தங்களது பாரம்பரியத்தைப் பற்றியும், தங்களது வேர் களைப் பற்றியும் நிச்சயம் வெளிநாட்டு வாழ் இந்தியக் குழந்தைகள் அறிந்து கொள்ள இது ஒரு நல்ல தளம்.''

**- நளினி சம்பத்குமார்**

படம்: **எஸ்.சம்பத்குமார்**



ந்த நிலா ஒன்றும் அத்தனை குளுமையாக தமிழ் சினிமாவுக்கு அறிமுகமாகவில்லை: தேனொழுகப் பேசும் நடிகைகளுக்கு மத்தியில் வசதி வாய்ப்புக் குறைகளை முன்னிறுத்தி 'ஜாம்பவான்' படப்பிடிப்பிலிருந்து வெளியேறி, அதன் தயாரிப்பைச் சில வாரங்கள் நிறுத்தினார் இவர். ஒரு நடிகையாலும் படப்பிடிப்பில் ஆதிக்கம் செலுத்த முடியும் என்று ஒரு நிலைப் பாட்டைக் கொண்டு வந்தார்! இப்படிப் பட்ட ஹீரோயின் வேண்டாம் என்று தமிழ் சினிமா நிலாவைச் சிறிது காலம் கண்டு கொள்ளவில்லை. ஆனால் 'லீ' படம் எல்லாக் கசப்புகளையும் மறக்கடிக்கச் செய்து நிலாவை நில்லாமல் ஓட வைத்திருக்கிறது.

''மீரா சோப்ராவாக வாழ்க்கை ஒரு மாற்றமும் அடையவில்லை. ஆனால் நிலாவாகத் தமிழ் சினிமாவில் அறிமுகமான பிறகு வாழ்க்கை என் கையில் இல்லை. முதல் படத்தில் நல்ல அறிமுகம் கிடைப்பது மிக முக்கியம். 'அன்பே ஆருயிரே' எல்லோரும் அறிந்த ஒரு படம். அதனால் எனக்கு மரியாதையும் மதிப்பும் முதல் படத்திலிருந்தே கிடைத்து வருகிறது. 'ஜாம்பவான்' பிரச்னை என் வாழ்க்கையில் நடந்த ஒரு மோசமான அனுபவம். இனி அதைப் பற்றிப் பேசுவதாகக்கூட இல்லை. அது தொடர்பான சர்ச்சைகளால் எனக்கு இழப்பு ஏற்பட்டது உண்மை. எல்லோரும் ஒதுங்கி நின்றார்கள். ஆனால், உண்மை தெரிந்த பிறகு நிலைமை சகஜமாகிவிட்டது. என்னை நிலை நிறுத்திக் கொள்ள நான் ஓடிக்கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. தன்னம்பிக்கை மட்டும் இல்லாவிட்டால் நான் மீண்டும் தமிழ் சினிமாவில் தலை தூக்கியிருக்க முடியாது'' என்கிறார் நிலா.

''இப்போது பரத்துடன் கில்லாடி, அர்ஜுனுடன் மருதமலை மற்றும் சிறிய வேடத்தில் சிம்புவுடன் காளை என மூன்று படங்களில் மட்டும் நடித்து வருகிறேன்'' என்கிறவருக்கு நிலா என்கிற திருநாமம் இட்டு புது வாழ்க்கை அளித்தவர் எஸ்.ஜே. சூர்யா. ஆனால் 'அ... ஆ'வுக்குப் பிறகு எஸ்.ஜே.சூர்யாவுடன் கிசுகிசுக்களில் கைகோத்தாரே தவிர, படங்களில் இணைந்து நடிக்கவில்லை.

''நிச்சயம் அவர் என்னுடைய நெருங்கிய நண்பர்தான். அன்பே ஆருயிரேவுக்குப் பிறகு நான் அவருடன் நடிக்காததற்கு ஒரு காரணம் உண்டு. ஒவ்வொரு படம் ஆரம்பிக்கும் போதும் மறக்காமல் எஸ்.ஜே.சூர்யா என்னை நடிக்க அழைத்தார். ஆனால், அவருடைய எல்லா படங்களிலும் மூன்று ஹீரோயின்கள் இருந்தனர்.

# எஸ்.ஜே.சூர்யாவுடன் ஏன்

எனக்கு அப்படி நடிப்பது ஒத்துவராது. அதனால் வேறு வழியில்லாமல் மறுத்துவிட்டேன். ஆனால் வெகுவிரைவில் அவருடன் நடிக்க உள்ளேன்'' என்கிற நிலாவுக்குத் தமிழ் சினிமா மீது சில குறைகள் இருக்கின்றன.

''தமிழ் சினிமாவில் ஒரு படத்தை முடிக்க நேரத்தை அதிகமாக விழுங்கிக் கொள்கிறார்கள். தமிழ் சினிமா என்றால் வேகமும் உழைப்பும்தானே. பிறகு ஏன் இப்படி? அதன் முக்கிய அடையாளம் மெள்ள மறைந்து வருகிறதோ என்று அச்சப்பட வேண்டியிருக்கிறது. அதேபோல் தமிழ் சினிமாவில் ஹீரோவுக்குத் தரும் முக்கியத்துவத்தை ஹீரோயின்களுக்கும் பகிர்ந்தளிக்கலாமே! தெலுங்கில் 'சத்யம் சிவம் சுந்தரம்' என்றொரு படம் பண்ணினேன். எவ்வளவு மன நிறைவு தெரியுமா! அதுபோன்ற நடிப்புக்கு வாய்ப்புக் கொடுக்கும் படங்களுக்காக ஏங்குகிறேன். நான் அவ்வளவு உயரம் கிடையாது. இன்னும் கொஞ்சம் அண்ணாந்து பார்க்கும் உயரத்தில் இருந்திருக்கலாம் என்கிற ஏக்கம் உண்டு. ஆனால் நடிப்பில் எட்டாத உயரங்களை எட்ட ஆசைப்படுகிறேன்'' என்கிறார் நிலா. இறுதியாக தமிழ் சினிமாவில் பிடித்த நடிகர், நடிகை யார் என்று கேட்டால், பளிச்சென்று சொல்கிறார்...

''அஜீத் - அசின்.''

- செந்தில்

# நிலா பேட்டி

# நடிப்புதில்லை?

# பெண்ணுக்குச் செயற்கைக் கருப்பை!



'இந்தியாவில் முதன் முறையாக செயற்கை முறையில் கருப்பையை உருவாக்கிச் சாதனை படைத்துள்ளது சென்னை ஆகாஷ் குழந்தையின்மை சிகிச்சை மையம்!'

இந்தச் செய்தி சில வியப்புகளையும் சந்தேகங்களையும் ஒரே சமயத்தில் எழுப்பியது.

விவரங்கள் அறிய சென்னை ஆகாஷ் குழந்தையின்மை சிகிச்சை மையத்தின் தலைமை மருத்துவரான டாக்டர் ஜெயராணி காமராஜை அணுகினோம்; விளக்கினார்.

* முகமது அலி

* சமியா

''தாயின் வயிற்றில் வளரும் கருவுக்கு ஆறிலிருந்து ஏழு வாரங்களாகும்போது தான் அது ஆணா, பெண்ணா என்பது நிச்சயிக்கப்படுகிறது. அந்தக் கருவில் தோன்றும் உல்ஃபியன் டக்ட், முல்லேரியன் டக்ட் ஆகிய இரு மொட்டுகளின் வளர்ச்சி அல்லது வளர்ச்சியின்மைதான் அது அவனா, அவளா என்பதைத் தீர்மானிக்கிறது.

உல்ஃபியன் டக்ட் வளர்ச்சியடைந்தால் அது ஆண். முல்லேரியன் டக்ட் வளர்ந்தால் அது சினைப்பை மற்றும் கருப்பை; அதாவது பெண்.

எங்களிடம் சிகிச்சைக்கு வந்த முப்பத்தொரு வயது சாமியா, ஓமன் நாட்டைச் சேர்ந்தவர். அவரது சினைப்பை முழுமையாக வளர்ச்சி

# இந்தியாவில் முதல் முறையாக...

## தமிழக டாக்டர் சாதனை!



* டாக்டர் ஜெயராணி காமராஜ்

அடைந்திருந்தது. முட்டைகள் உருவாவதில் எந்தப் பிரச்னையும் இல்லை. ஆனால், அவரது முல்லேரியன் டக்ட் முழுமையான வளர்ச்சியை அடையாததுதான் பிரச்னை. அவரது கருப்பை உருவாகியிருக்க வேண்டிய இடத்தில் ஒரு தசைக் கோளம் மட்டுமே இருந்தது. இதனால் அவருக்கு மாதவிலக்கு நடைபெறவே இல்லை.

சினைப்பை சீராக இயங்கினாலும் கருவுற முடியாத இதுபோன்ற நிகழ்வை முல்லேரியன் டிஸ்ஜெனிஸிஸ் (Mullerian Dysgenesis) என்போம் (ஜெனிஸிஸ் என்றால் உருவாக்கம். டிஸ்ஜெனிஸிஸ் என்றால் சிதைந்த உருவாக்கம் எனலாம்). இந்த நிலை 1,500 பெண்களில் ஒருவருக்குத் தோன்றுகிறது.

ஐரோப்பிய நாடுகள் சிலவற்றுக்குச் சென்று தம் மனைவிக்கு செயற்கைக் கருப்பையை உருவாக்க முடியுமா என்று கேட்டிருக்கிறார் அவரது கணவர் முகமது அலி. அங்குள்ள மருத்துவர்கள் முடியாது என்று மறுத்து விட்டிருக்கிறார்கள்.

சாமியாவின் உடலில் நேர்ந்த தவறை சரி செய்வதுதான் எங்களுக்கான சவாலாக இருந்தது. அந்தத் தசைக் கோளத்தைக் கருப்பையாக மாற்றி அமைத்தோம். மதியம் ஒரு மணிக்குத் தொடங்கிய அறுவை சிகிச்சை இரவு ஒன்பதரைக்குதான் முடிந்தது. இந்தக் குழுவில் சிறுநீரகவியல் நிபுணர் டாக்டர் ராஜமகேஸ்வரியும் இடம் பெற்றார்.

சென்ற வருடமே அறுவை சிகிச்சை நடந்தது. இந்திய மருத்துவக் கூட்டமைப்பின் மாநாட்டில் இதைப் பற்றிப் பேசினேன். இதற்கு முன் செயற்கைக் கருப்பை உருவாக்கப்பட்டதில்லை என்று தெரிந்தது. என்றாலும் சாமியாவின் கருப்பை நன்கு இயங்கட்டும் என்று காத்திருந்தோம்.

இந்த ஆண்டு ஏப்ரல் மாதம் நல்ல செய்தி கிடைத்தது. சாமியா தன் வாழ்நாளில் முதன்முறையாக மாதவிலக்கு ஆனார். ஏப்ரல், மே, ஜூன் ஆகிய மூன்று மாதங்களிலும் குறிப்பிட்ட நாட்களில் அவருக்கு மாதவிலக்கு ஏற்பட்டு செயற்கைக் கருப்பை சரியாக இயங்குவதை உறுதியானது. அவரது உடலில் புதிய ஹார்மோன்கள் சுரப்பதை உணர்ந்து கொண்டோம்.

'எல்லாம் கடவுள் அருள்' என்று சந்தோஷப்பட்டனர் தம்பதி. இதன் மூலம் ஓர் இயற்கையான வாரிசு அவர்களுக்கு உண்டாகும் என்கிற நம்பிக்கை இருக்கிறது'' என்றார் டாக்டர் ஜெயராணி.

- ஜி.எஸ்.எஸ்.

# நடக்குமென்பார்;

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** நினைத்த காரியம் கைகூடும். உத்தியோகத்தில் இட மாறுதல் ஏற்படும். கல்வி நலனுக்காகக் குழந்தைகள் இடமாறிச் செல்ல நேரிடும். உடல் நலம் சீராகும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். சனி/ ராகு/ கேது/ குரு வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.

**ரிஷபம்:** பொருளாதார சிரமம் இருக்காது. சிலருக்குத் தொழில் வழியில் புதிய பிரச்னைகள் ஏற்பட்டு பின்பு சரியாகும். திருமணக் காரியம் கைகூடும். வியாபாரத்தில் விபரீத லாபம் ஏற்படும். ராகு/ கேது வழிபட்டு வர நற்பலன் ஏற்படும்.

**மிதுனம்:** பணக்கஷ்டம் இருக்காது. வியாபாரத்தில் முன்னேற்றம் காணப்படும். வாக்கு வன்மை மேலோங்கும். தடை விலகித் திருமணம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் ஏற்படும்.

**கடகம்:** சுபகாரியச் செலவுகள் வந்து சேரும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். தன வருவாய் பெருகும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். கூட்டாளிகள் விலகிச் செல்ல நேரிடும். ராகு/கேது/ சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** முன்னேற்றமான தகவல்கள் வந்து சேரும். மனக் குழப்பம் விலகும். தொழில் துறையில் அதிரடி மாற்றம் ஏற்படும். கடன் தொல்லை குறையும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். ராகு/கேது/சனி/குரு வழிபட்டு வருதல் நலம் தரும்.

**கன்னி:** உல்லாசப் பிரயாணங்கள் வந்து சேரும். மனப்பிரம்மை தீரும். நீண்ட நாள் வராத கடன்கள் வசூலாகும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். புதிய தொழில் முயற்சி நற்பலனைத் தரும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் மிகுதி ஆகும்.

**துலாம்:** மனைவி வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். உடல்நிலை பாதிக்காது. மனச்சலனம் விலகும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். புதிய முதலீடு செய்வது நற்பலனை அளிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** மறைமுக எதிர்ப்புகள் விலகும். தடைகள் விலகி நற்பலன் ஏற்படும். சுபகாரிய நிகழ்ச்சிகள் கைகூடும். குழந்தைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். வெளிநாடு அழைப்பு ஏற்படும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். குரு/ராகு/கேது வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும்.

**தனுசு:** உடல் ஆரோக்கியம் சீராகும். மறைமுக எதிர்ப்பு, தொல்லைகள் இருக்

## பரத்வாஜ் பதில்கள்

**எ**ன் மகனுக்கு எப்போது திருமணம் நடைபெறும்?

- கு.பக்தவச்சலம்,
சென்னை - 40

37 வயதில் திருமணம் நடக்கும். படித்த, பண்புள்ள அழகான மனைவி அமைவார். பரிகாரம் தேவை இல்லை.

# நடக்கும்!

**8.7.2007 முதல் 14.7.2007 வரை**



மதுரை மேற்குல முந்தியாச்சு... அடுத்து அந்த சீட் கிடைக்குமான்னு பார்த்துச் சொல்லுங்க சார்...

கும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். வழக்கு முடிவுக்கு வரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். எதிர்பாராத அதிர்ஷ்டம் கிட்டும். சனி/குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மகரம்:** நல்ல காரியங்கள் நடக்கும். நீண்ட நாள் எதிர்பார்த்த பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உடல்நிலையில் கவனம் தேவை. கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் கவனமாக இருக்கவும். சிலருக்கு வேலையில் அதிரடி மாற்றம் உண்டாகும். ராகு/கேது/சனி வழிபட்டு வர நற்பலன் கிட்டும்.

**கும்பம்:** மனக்குறைகள் விலகி மன நிறைவு பெறும் வாரம். தடை விலகித் திருமணம் கைகூடும். வேறு வேலைக்கு முயற்சி செய்பவர்களுக்குப் புதிய வேலை கிட்டும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். வராத நிலுவைகள் வசூலாகும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மீனம்:** வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். சுபச் செலவு ஏற்படும். வீடு/மனை வழியில் ஆதாயத்தை அடைவீர்கள். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர் வழியில் ஆதாயம் ஏற்படும். நீண்ட காலக் கனவுகள் நிறைவேறும். ஆஞ்சநேயரை வழிபட்டு வருதல் நலம் தரும். ○

**எ**ன் மைத்துனர் மகனுக்குத் திருமணம் தள்ளிக்கொண்டே போகிறது. ஏதேனும் பரிகாரம் தேவையா?

–ஆர்.வேதநாராயணி,
பாலவாக்கம்

2007 முடிவில் திருமணம் கைகூடும். தோஷம் எதுவும் இல்லை. உறவில் அமையாது. சுத்த ஜாதகம் சேர்க்கவும்.

விடுமுறைக்காக ஊட்டி அல்லது கொடைக்கானல் சென்றவர்கள், தொலை தூரத்தில் மலைச்சரிவில் காட்டுத் தீ கொழுந்துவிட்டு எரிவதைப் பார்த்திருக்கக் கூடும். இரவு நேரங்களில் 'பளிச்' சென்று தெரியும். ஆனால் அருகில் சென்று பார்த்தால்தான் காட்டுத் தீ இழைக்கக் கூடிய பேரழிவை முற்றிலுமாக உணர முடியும்.

யுத்தம் என்பது எத்தகைய கோர கிருத்தியங்களுக்கு இடமளிக்கக் கூடியது என்பதை உணர்த்த, 'காட்டுத் தீ' (Flame Of The Forest) என்ற தலைப்புடன் தமது நாடகத்தை கௌரி ராம்நாராயண் அரங்கேற்றியுள்ளார். அமரர் 'கல்கி'யின் சிவகாமியின் சபதம்தான் மேற்படி தலைப்பில் ஆங்கில நாடகமாக இசையும் நடனமும் இணைய மேடையேறியுள்ளது.



கம்பனையும் காளிதாசனையும் பல்வேறு கோணங்களில் பார்த்து, பல்வேறு உரையாசிரியர்கள் தங்கள் கருத்துகளை வெளியிட்டுள்ளது போல, சிவகாமியின் சபதம் போன்ற நவீன பேரிலக்கியங்களையும் புதிய கோணங்களில் நோக்கி, ஓர் ஆய்வாளர் தமது கருத்துக்களை வெளியிட முடியும். 'மனித மனத்தின் அகந்தையே யுத்தங்களுக்கும் அது தொடர்பான துன்பங்களுக்கும் காரணமாகிறது' என்று தமது நாடகத்தின் வாயிலாக உணர்த்துகிறார் கௌரி.

சிவகாமியின் சபதம் எழுதப்பட்ட கால கட்டத்தில் இரண்டாம் உலக யுத்தத்தின் விளைவாக ஏற்பட்ட பேரழிவுகள் 'கல்கி'யின் உள்ளத்தில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியிருக்கும் என்பதால் அந்த நாவலின் பிரதான கருத்து நாடக ஆசிரியர் கௌரி எடுத்துக்காட்டுவதுபோல 'யுத்தம் தவிர்' என்பதாகவே இருந்திருக்கலாம்; மறுப்பதற்கில்லை.

'நாடகத்தின் சிறப்பு, அது வெளிப்படுத்துகிற கருத்திலே மட்டுமில்லை; சரித்திர நாடகமென்றால் ஏராளச் செலவில் பிரமாத சீன்-செட்டிங்குகள், ஆடை-ஆபரணங்கள் தேவை' என்ற எண்ணத்தை மாற்றி அமைத்துள்ளார் கௌரி. வசனங்

நாடக விமர்சனம்

# காட்டுத் தீ!

பயன்படுத்தியுள்ளார் கௌரி-இந்த நாடகம் இன்றைய தலைமுறைக்கு என்று உணர்த்துவது போல.

இன்றைய ரசிகர்களுக்கு மட்டுமல்ல; இன்றைய குட்டிப் புலிகேசிகளுக்கும் அசுரப் புலிகேசிகளுக்கும் சேர்த்துத்தான் இந்த ஆங்கில நாடகம். அனைத்திந்திய வரவேற்பை மட்டுமின்றி சர்வதேச பார்வையாளர்களையும் பெற வேண்டும்.

களின் சிறப்பாலும் நடிப்பாற்றலினாலுமே ரசிகர்களைக் கவர்ந்து விடுகிறது.

புலிகேசியாக நடிக்கும் பாலகிருஷ்ணனும் மகேந்திர பல்லவனாகத் தோன்றும் தீவ்ஷ் மாரிவாலாவும் கௌரியின் டைரக்ஷனில் பிரமாதமாக சோபிக்கிறார்கள்.

இளம் சிவகாமியாக மைதிலி பிரகாஷும் வயதான சிவகாமியாக பிரியதர்ஷினி கோவிந்தும் தங்கள் நடன ஆற்றலை முழுமையாக வெளிப்படுத்த நாடகத்தில் வாய்ப்பில்லை. நாடகத் தன்மை தூக்கலாக இருந்தாலும் நடனத்தில் பழுதில்லை. இரண்டு சிவகாமிகளும் ஒரே சமயத்தில் மேடையில் தோன்றி நடிப்பதும் நடனமாடுவதும் அரிய புதிய உத்தி. இருவேறு காட்சிகளை ஒரே சமயத்தில் காண்கிற உணர்வு ஏற்படுகிறது. இருவருக்குமாகச் சேர்த்து ஒரு வார்த்தை: 'சபாஷ்.'

பாடல்கள் பாவபூர்வ இசையுடன், உணர்ச்சியோடு பாடப்பட்டுள்ளன. அப்பர் பெருமானின் பாடல்களை மட்டுமின்றி 'கல்கி'யின் பாடல்களையும் துணிந்து

யுத்தம் நடப்பதாக உணர்த்த் வேண்டிய தருணங்களில் யுத்த அரக்கனாக வேஷமணிந்த ஒருவர் மேடைக்கு வந்து 'தக்கிட்ட தக்க திமி' என்று குதித்து விட்டுப் போவதைத் தவிர்க்கலாம். கதையோட்டத்தை உணர்ச்சிமிக்கக் குரலில் ஒலிக்கச் செய்யலாம்.

'எல்லாம் சரிதான்; நாகநந்தி எங்கே? நாகநந்தி இல்லாமல் சிவகாமியின் சபதமா?' என்று கேட்பவர்களுக்கு ஒரு செய்தி: அமரர் 'கல்கி' சிவகாமியின் சபதத்தை முதன்முதலில் நாடகமாகத்தான் எழுதினார். திருச்சி அகில இந்திய ரேடியோ நிலையத்தில் ஒலிபரப்பானது. அந்த நாடகத்தில் நாகநந்தி என்ற கதா பாத்திரமே கிடையாது!

– ரசிகன்

* அறிமுக விழாவில்... ஈசான் (இடமிருந்து முதலாவது)




# புகையில்லா கற்பூரம்!

'இங்கு கற்பூரம் ஏற்றக் கூடாது'- இது எல்லாக் கோயில்களிலும் நாம் பார்க்கும் வாசகம்தான். ஈசான் கவுரங்தாஸுக்கு இந்த வாசகம் பெரும் திருப்புமுனையாக அமைந்திருக்கிறது. மலேசிய வாழ் தமிழரான இவருடைய மனைவி கௌரியின் மனதில் தோன்றிய சின்ன பொறி, இன்று மலேசியக் கோயில்களில் கற்பூர தீபமாய் ஜொலிக்கிறது.

ஈசான் கவுரங்தாஸும் அவர் மனைவி கௌரியும் மலேசியா பினாங்கில், கௌரா கற்பூரத் தொழிற்சாலை நடத்தி வருகின்றனர். இங்கு தயாரிக்கப்படும் கற்பூரத்தில் புகை வராது என்பதுதான் சிறப்பு. இந்த யோசனை எப்படி வந்தது என்பதற்கான காரணத்தை நம்மிடம் விளக்கினார் ஈசான்.

''புராணங்களைப் படிக்கறபோது கற்பூர தீபம் பிரார்த்தனையில் எவ்வளவு முக்கியமானதாக இருந்திருக்கிறது என்பது தெரிய வந்தது. எந்தவொரு பிரார்த்தனையும் கற்பூர தீப ஆராதனைக்குப் பின்னரே நிறைவேறுகிறது என்கிறது இந்து மதம். கற்பூரத்தின் புகையினால் ஏற்படும் கரி, சுவர்களிலும் விக்ரஹங்கள் மீதும் படிகிறது. நுரையீரல் பாதிப்பு ஏற்படுத்துகிறது. முப்பது வருடங்களுக்கு முன்பு ரயிலில் பயணம் செய்தால், இறங்கும்போது மேலே கரி படிந்து ஆள் அடையாளம் தெரியாமல் ஆகிவிடுவோம். அதற்காக ரயிலை ஒதுக்கவில்லை; தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி சரிசெய்து விட்டோம்.

அதுபோல புகையில்லா கற்பூரத்தை தயாரித்துப் பயன்படுத்தலாமே என்று என் மனைவி என்னிடம் கேட்டார். கேட்டதோடு நிற்காமல் அதற்கான முயற்சியிலும் இறங்கினார். கெமிக்கல் இன்ஜினீயரான அவர், பல ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு, புகையில்லா கற்பூரத்தைக் கண்டுபிடித்து விட்டார்.

கற்பூரத்தில் சேர்க்கப்படும் மெழுகு, நாப்தலின் போன்ற வேதிப் பொருட்கள் அதிகப் புகையை உண்டாக்கி உடலுக்குக் கேடு ஏற்படுத்தும். இதற்கு மாற்றான பொருட்களைக் கொண்டு செய்த கற்பூரம் நல்ல பலனைத் தருகிறது. இப்போது மலேசிய வீடுகளிலும், கோயில்களிலும் எங்கும் கௌரா கற்பூரம்தான்!'' என்கிறார் ஈசான்.

இவர்கள் தயாரிக்கும் கற்பூரத்தைத் தற்போது தமிழகத்திலும் அறிமுகம் செய்துள்ளனர். 'அருணா புகையில்லா கற்பூரம்' என்ற பெயரில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள இந்தக் கற்பூரங்களைத் தொடர்ந்து, தரமான பூஜைப் பொருட்கள் தயாரிக்கும் திட்டமும் இவர்களிடத்தில் இருக்கிறது. அருணா கற்பூரத்தில் கிடைக்கும் இலாபத்தில் ஒரு பங்கு ஆதரவற்ற ஏழைகளுக்கு உதவ பயன்படும் என்றும் அறிவித்திருக்கிறார் ஈசான் கவுரங்தாஸ்.

– தீபா

படங்கள்: பொள்ளாச்சி சுந்தரம்



கு.இலக்கியன்

காலம் கடந்து
பார்க்க வைத்துக்கொண்டிருக்கிற
உன் புகைப்படம்
என் தீராப் பார்வை...

விழி பிதுங்கி விழுமெனில்
கடைசி பதிவு
உனது பிம்பம்

மெள்ள
சமரசம் செய்துகொண்டிருக்கிற
சாரல் உன் தலை துவட்டல்

நிலவின் மறைவு
சூரியனின் துவக்கம்
இணைந்தே இருக்கும்
வானம் நீ

ஏற்றும்போதெல்லாம்
எரிகிற மெழுகில்
சிரிக்கிற தீபமும் நீ

திசையறியா காற்றில்
இருப்பை உணர்த்த
வாசம் பரப்பிய
பூவனம் உன் மனம்

எதுவாயினும்
அழு...
அழு...
அழு...
பொய் பேசியே
கழிந்திருக்கிற
ஒரு நூற்றாண்டை
நிராகரிக்கிற
மொழி அது



# தீராப் பார்வை




உலகம் இவ்வளவுதான்

# பற்றி எரியும்

"வணக்கம் என் பெயர் ஜோ வில்டிங். இது என் வெப்சைட் (Wildfire). நான் பார்த்த, கேள்விபட்ட சங்கதிகளை இங்கே பதிவு செய்திருக்கிறேன். உட்காருங்கள். ஒவ்வொன்றாக, பொறுமையாகப் படியுங்கள். களைப்படையும்போது, சிறிது தேநீர் அருந்துங்கள்'

- இப்படித் தொடங்குகிறது அந்த வெப்சைட். தேதி வாரியாக, கிழமை வாரியாகக் கதைகள் வாசிக்க, வாசிக்க களைப்பு மட்டுமல்ல... சோகமும் சேர்ந்தே நம்மை வந்து அழுத்துகிறது. அத்தனையும் இராக் தேசத்தைப் பற்றின கதைகள். அருந்த ஒரு டம்ளர் பால் கிடைக்காமல் கருண்டு கிடக்கும் குழந்தைகளைப் பற்றி; ஃபலூஜாவில் திடீர் திடீர் என்று இடிந்து விழும் கட்டடங்களைப் பற்றி; அமெரிக்கப் படை வீரர்கள் அதிர அதிர நடத்தும் அட்டகாசங்கள் பற்றி எனத் தொடர்கிறது.

ஃபலூஜாவை கிட்டத்தட்ட புகுந்த வீடுபோல் பாவித்து வாழ்ந்திருக்கிறார்

**மருதன்**



# ஃபலூஜா!

ஜோ. சீறிப் பாய்ந்து வரும் தோட்டாக்களை அருகிலிருந்து அவர் தரிசித்திருக்கிறார். கொடுத்த வேலையைச் சீராக முடித்து விட்டு, உருண்டு போகும் பீரங்கியை வெறுப்பு பொங்கப் பார்த்திருக்கிறார். இராக்கின் புழுதி, ரத்தம், சத்தம் எல்லாமே எல்லாமே இவருக்குப் பரிச்சயமானவை.

ஜோ வில்டிங் முப்பத்திரண்டு வயதான பத்திரிகையாளர். பிரிட்டன்வாசி. திருமணமாகிவிட்டது. டாக்குமெண்டரி படங்கள் எடுத்திருக்கிறார். நடித்திருக்கிறார். மனித உரிமை மீறல் குறித்து ஆய்வு செய்து வருகிறார். பாரிஸ்டர். புகைப்படங்கள் எடுக்கிறார். ஆம்புலன்ஸ் வண்டி ஓட்டுகிறார். தேவைப்பட்டால் குழந்தைகளை மகிழ்விக்க சர்க்கஸ் நடத்துகிறார். முக்கால் பேண்ட் போட்டுக்கொண்டு இராக் வீதிகளில் நடந்து சென்று தான் பார்த்தவற்றை, தன்னை பாதித்தவற்றை அழுத்தத்துடன் பதிவு செய்து வருகிறார். இராக்கைப் பற்றி ஜோ சொல்லித்தான் உலகுக்குப் பல பதற வைக்கும் கதைகள் தெரிய வந்தன.

தீவிர அமெரிக்க, பிரிட்டன் எதிர்ப்பாளரான ஜோ, ''இராக்குக்கு ஒரு நடை போய்ப் பாருங்கள். வேறு எதுவாகவும் உங்களால் இருக்க முடியாது'' என்கிறார். 1991 முதல் 2003 வரை இராக் மீது இந்த இரு தேசங்களும் விதித்த பொருளாதாரத் தடைகளால் ஐந்து லட்சம் குழந்தைகள் செத்துப் போனார்கள். 'குண்டூசிகூட உள்ளே நுழைய அனுமதிக்க மாட்டோம்' என்றது அமெரிக்காவும் பிரிட்டனும். விளைவு? ஒரு துண்டு ரொட்டியை ஒன்பது பேர் மூன்று வேளைக்குச் சாப்பிட்டாக வேண்டிய நிலைமை. மருந்து மாத்திரைகள் இல்லை. மின்சாரம் இல்லை. உணவுப் பொருள்கள் இல்லை.

**ஜோ** முதன்முதலாக இராக் சென்றது 2001-ல். பொருளாதாரத் தடை என்னும் பெயரில் ஒரு தேசத்தை எப்படியெல்லாம் சித்திரவதைச் செய்யலாம் என்பதை அவர் நேரடியாகத் தெரிந்துகொண்டது அன்றுதான். பிறகு 2003-ல் மீண்டும் இராக் சென்றார். இந்தமுறை அவர் சென்றது ஒரு பத்திரிகையாளராக அல்ல; சர்க்கஸ் உரிமையாளராக. குழந்தைகளை மகிழ்விக்க சர்க்கஸ் நடத்திக் கொண்டிருக்கிறோம். உலகம் முழுவதும் சுற்றி வருகிறோம். இராக்குக்கும் வரலாம்தானே? அரசாங்கத்திடம் பர்மிஷன் கேட்டுவிட்டு நுழைந்தார். சர்க்கஸ் நடத்தினார். நரகத்தை, தப்பு தப்பு... நகரத்தைச் சுற்றிப் பார்த்தார். கையோடு கொண்டு சென்றிருந்த (ரகசியமாகத்தான்) பிளாஸ்திரி, மாத்திரைகளைத் தேவைப்படுபவர்களுக்கு விநியோகித்தார். சர்க்கஸ் டிக்கெட்டில் கிடைத்த பணத்தை இராக்கியர்களுக்காகச் செலவிட்டார்.

ஏப்ரல் 2004-ல் நிலைமை மோசமாக மாறியது. இராக் எரிய ஆரம்பித்தது. குறிப்பாக



ஃபலூஜா. மூன்றாவது முறையாக இராக்குக்குள் காலடி எடுத்து வைத்தார் ஜோ. வந்ததும் வராததுமாக அவருக்குள் உதித்த கேள்வி இதுதான்: பத்திரிகையாளர்கள் என்று ஒருவரும் இங்கே இல்லையே ஏன்? எங்கே போய்விட்டார்கள் அவர்கள்? இராக்கில் போர் என்று சதாமோ, புஷ்ஷோ பிரஸ்மீட் வைத்துச் சொன்னால்தான் வருவார்களா? போர் எப்படி நடக்கிறது என்று பார்க்க வேண்டாமா? இராக்கியர்கள் இந்தப் போரை எப்படிப் பார்க்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? போரால் பாதிக்கப்படுபவர்களை கண்டு பேசி, அவர்கள் சொல்லும் கதைகளை வெளியிட வேண்டாமா?

அன்று முடிவு செய்ததுதான். 'இன்று முதல் நான் ஒரு பத்திரிகையாளர். போர் எத்தனை குரூரமானது, எத்தனை விகாரமானது என்பதை உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டப் போகிறேன்.' ஏப்ரல் 2004ல் ஜோ எழுதத் தொடங்கினார். உண்மையை மட்டும், அதுவும் கண்ணால் கண்ட உண்மையை மட்டும்.

ஜோவின் ஒரு பதிவு இங்கே.

'ஒரு வயதான ஆள் வீட்டை விட்டு வெளியில் வந்தார். காற்று வாங்குவதற்காக இருக்கலாம் அல்லது வெளியில் எங்காவது செல்ல உத்தேசித்திருக்கலாம். ஒரு நிமிடம் தான் ஆகியிருக்கும். அவர் மார்பை குறி பார்த்துச் சுட்டுவிட்டார்கள். ஏன் எதற்கு என்று தெரியவில்லை. அப்பாவின் அலறல் சத்தம் உள்ளே இருந்த மகன்களுக்குக் கேட்டது. ஆனால், கதவைத் திறந்து வெளியில் வர அவர்களுக்குத் துணிச்சல் இல்லை. ஏதோ ஒரு வேலையாகச் சுற்றிக் கொண்டிருந்த போதுதான் அந்த வீட்டை நான் கவனித்தேன். கதவை பலமாகத் தட்டினேன். 'யாருமில்லை. வெளியில் வாருங்கள்' என்று கத்தினேன். பிறகுதான் அவர்கள் வெளியில் வந்தார்கள். இறந்து போன தந்தையை அப்போதுதான் அவர்கள் பார்த்தார்கள்.'

அமெரிக்க ராணுவ பயங்கரவாதத்தின் உச்சகட்டம் ஃபலூஜா. யாரும் யாரை வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் சுட்டுத் தள்ளலாம். காரணம் அநாவசியம். குழந்தைகள், பெண்கள், வயதானவர்கள் ஒருவரும் விதிவிலக்கல்ல. அமெரிக்கர்களுக்காக இயற்றப்பட்ட சிறப்புச் சட்டம் இது. இறந்தவர்களையும் அடிபட்டவர்களையும் ஜோ ஆம்புலன்ஸில் சுமந்து சென்ற போதுகூட, ஆம்புலன்ஸ் வண்டியை நோக்கி அமெரிக்க வீரர்கள் சரமாரியாகச் சுட்டிருக்கிறார்கள்.

ஃபலூஜாவில் மட்டுமல்ல... இராக் முழுவதும் இதுபோல பல நூறு கதைகள். இன்னமும் அவை தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன என்கிறார் ஜோ. இதை 'அநாகரிகமான' முதலாளித்துவ போர் என்பதைத் தவிர சொல்வதற்கு வேறொன்றுமில்லை.

டோனி பிளேருக்குப் பதிலாக கார்டன் பிரவுன் வந்திருக்கிறாரே... அதனால் இராக்கில் ஏதாவது மாற்றம் ஏற்பட வாய்ப்புண்டா? 'சர்வ நிச்சயமாக இல்லை' என்பது ஜோவின் பதில். 'பிளேரா... பிரவுனா என்பதல்ல கேள்வி. பெயர்கள் முக்கியமல்ல. யாராக இருந்தாலும் குண்டு போடப் போகிறார்கள். யார் குண்டு போட்டாலும் நாசம் நிச்சயம்.'

ஜோவின் வலைதளம் இதோ: http://jowilding.net/




# நமக்கெல்லாம் தாயார்!

கோயில் உண்டி வாயிலே மெக்கானிக்கலாகப் பணத்தைப் போடுவது பெரிசில்லை. அதுவும் இப்போது இருக்கிற பணப்புழக்கத்தில் எவரும் ஏதோ கொஞ்சம் உண்டியில் போட்டுவிட்டுப் போய்விடலாம்., அதுவும் பண்ண வேண்டியதுதான். ஆனாலும் இப்படி மெக்கானிக்கலாக உண்டி வாயில் போடுவதைவிட, ஒரு செலவும் நமக்கு இல்லாமலேயே கறிகாய்த் தோலிகளை நேரே உயிருள்ள ஒரு பசு வாய்க்குப் போட்டு, அது தின்பதைப் பார்த்தால், இதில் நமக்குக் கிடைக்கிற உள்ள நிறைவே அலாதி என்று தெரியும். சேவையிலே இதுதான் முக்யமான அம்சம். அதில் பணமும் உழைப்பும் பேசுவதைவிட ஜீவனோடு ஜீவன் பேச வேண்டும். சேவை செய்கிறவர்கள் சங்கமாக ஒன்று கூடும்போது இப்படி உயிர்த் தொடர்பு ஏற்படுவது மட்டுமின்றி, சேவைக்குப் பாத்திரமாகிறவர்களையும் நேரே தங்களோடு தொடர்புபடுத்திக் கொள்ள வேண்டும். ஒரே ஈஸ்வரன் தானே இத்தனை ஜீவன்களுமாகியிருப்பது? ஜீவலோகத்துக்குச் சொரிகிற அன்பினால், சேவையால் அந்த ஈஸ்வரத்வத்தை அநுபவித்து அவனுக்கு வழிபாடாகவே இதைச் செய்வதுதான் சேவையின் சாரம்.

கறவை நின்ற மாடுகளை அடிமாட்டுக்காக விற்காமல் ஜீவிய காலம்வரை அவற்றைக் காப்பாற்ற வழி செய்ய வேண்டியது நம் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை - தாயாருக்குச் செய்ய வேண்டிய கடமைக்குச் சமமான கடமை. பகவத் ஸ்ருஷ்டியிலேயே தன் கன்றுக்கு வேண்டியதைவிட உபரியாக மற்றவர்களுக்கென்றும் பாலைச் சுரக்கிற பசு நமக்கெல்லாம் தாயார்தான்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# காவிரி டெல்டா:

இந்தக் கட்டுரையைப் படித்துக் கொண்டிருக்கும் இந்நேரம் தமிழகத்தின் நெற்களஞ்சியமான தஞ்சையிலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் குறுவை சாகுபடிக்கான வேலைகள் துவங்கியிருக்க வேண்டும். ஆனால், காவிரிப் பாசன விவசாயிகள், தங்கள் வயல்களில் ஏர் உழலாமா? நாற்றாங்கால் பயிரிடலாமா? மேட்டூர் அணையிலிருந்து தண்ணீர் வருமா? போன்ற அடுக்குத் தொடரான வினாக் குறிகளுக்குள் அடைபட்டுக் கிடக்கின்றனர். இதனால் குறுவை சாகுபடிக்கான ஆயத்தப் பணிகளில் இன்னும் அவர்களால் ஈடுபட முடியவில்லை.

* ஏ.வி.கோபாலதேசிகன்



பொதுவாக, மேட்டூர் அணை ஒவ்வோர் ஆண்டிலும் ஜூன் மாதம் பன்னிரண்டாம் தேதியன்று திறந்து விடப் படும். அப்பொழுதுதான் குறுவை சாகுபடி, அதன் உரிய காலத்தில் அறுவடைக்கு வந்து நிற்கும். மேட்டூர் அணை திறப்பது என்பது, அணையின் அப்போதைய நீர் மட்டம் - கர்நாடக கபினி மற்றும் கிருஷ்ண ராஜசாகர் அணைகளிலிருந்து வந்து சேரும் நீரின் அளவு - காவிரி நீர்ப் பிடிப்புப் பகுதிகளில் பொழியும் பருவ மழையின் தன்மையைப் பொறுத்தது.

இப்போதைக்கு மேட்டூர் அணையின் நீர் மட்டம் எழுபத்து மூன்று அடி. நீர்வரத்து வெறும் அறுநூறு கன அடி மட்டுமே. மேட்டூரிலிருந்து திறந்து விடப் படுவது ஆயிரம் கன அடி. சூழல் இவ்வாறு மிகவும் இறுக்கமாக இருந்து வருவதால்தான், மேட்டூர் அணை இன்னும் திறக்கப்படவில்லை. தென்மேற்குப் பருவ மழை சமீப நாட்களாக கர்நாடகாவில் தீவிரமடையத் துவங்கியுள்ளது, சற்று ஆறுதலான செய்தி.

கடந்த இருபது ஆண்டுகளில், எட்டு ஆண்டுகள் மட்டுமே ஜூன் மாதம் மேட்டூர் அணை திறந்து விடப் பட்டிருக்கிறது. நான்கு ஆண்டுகள் ஜூலை மாதமும், ஐந்து ஆண்டுகள் ஆகஸ்ட் மாதமும் செப்டெம்பர், அக்டோபர், நவம்பர் ஆகிய மாதங்களில் தலா ஒவ்வோர் ஆண்டும் திறந்து விடப்பட்டிருக்கிறது.

மேட்டூர் அணை திறக்கக் கால தாமதம் ஆகும் வருடங்களில் எல்லாம், மாற்றுப் பயிரை நாடினால் என்ன என்கிற எண்ணம், காவிரிப் பாசன விவசாயிகள் மனசுக்குள் விதையாகப் பதிகிறது.

திருச்சி மாவட்ட காவிரி டெல்டா பாசன விவசாயிகள் நலச் சங்கத்தின் இணைச் செயலாளர் ஏ.வி.கோபாலதேசிகன் இதுகுறித்து நம்மோடு பேசினார்...

''தமிழகக் காவிரிப் பாசனத்தை இரு பிரிவுகளாகப் பகுத்துக் கொள்ளலாம். கல்லணைக்கு மேற்கே ஈரோடு ஜேடர்பாளையம் வரை ஒன்று. கல்லணைக்குக் கிழக்கே

தஞ்சை - நாகை - திருவாரூர் மாவட்டப் பகுதிகள் மற்றும் கடை மடைப் பகுதிகள் வரை மற்றொன்று. கடந்த இருபது ஆண்டுகளுக்கும் மேலாக கல்லணைக்கு மேற்கே உள்ள பகுதிகளில் மாற்றுப் பயிரான மஞ்சள், கரும்பு, வாழை போன்றவையே பெரும்பாலும் பயிரிடப்பட்டு வருகின்றன. நெல் போல் இல்லாது, இவை உடனடிப் பணப் பயிர்களும் கூட. மாற்றுப் பயிர் அதிகரிக்கும்போது, நெல் உற்பத்தி வெகுவாகக் குறைந்து போகும். இது தவிர்க்க முடியாதது.

மத்திய அரசு சாகுபடிச் செலவுகளின் அடிப்படையில் நெல்லுக்கு விலை நிர்ணயம் செய்வதில்லை. கடைநிலை நுகர்வோரின் வாங்கும் திறன் அடிப்படையைக் கொண்டே நெல்லின் விலை நிர்ணயிக்கப்படுகிறது. இதனால், நெல் உற்பத்தியாளர்களுக்கு பெரும் நஷ்டமே கிடைத்து வருகிறது. மாற்றுப் பயிர் சாகுபடி அதிகரிக்கும்போது, நெல்லுக்கு உரிய விலை கிடைக்கும் நிலை உருவாகலாம்'' என்கிறார் கோபால தேசிகன்.



✱ வி.ராஜாராம்

''கல்லணைக்குக் கிழக்கே காவிரிப் பாசன விவசாயிகளுக்கு மாற்றுப் பயிர் சாகுபடி முயற்சி என்பது கானல் நீரே. மாற்றுப் பயிர்கள் அதிக நீர் தாங்கி வளரக் கூடியவை அல்ல. கடற்கரையோர புயல் மழையும், கல்லணைக்கு மேற்கிலிருந்து வரும் பெரும் வெள்ள நீரும் தஞ்சை - நாகை - திருவாரூர் மாவட்டப் பகுதி நஞ்சை வயல்களை வெள்ளக் காடாக்கி விடுவது வாடிக்கை. மாற்றுப் பயிர் சாகுபடி காலத்தில் மேட்டூர் அணை திறந்தே விடப்படாது என்கிற உறுதிமொழியோ, பெரும் வெள்ள மழை பெய்யாது என்பதற்கான உத்தரவாதமோ ஏதுமில்லை. மாற்றுப் பயிர்கள் வளர்ந்து வரும் காலங்களில் அதிகளவு தண்ணீர் தேக்கத்தினால் அழுகிப் போய்விடும் வாய்ப்புகள் நிறைய உள்ளன. காரணம், காவிரி டெல்டாவின் நெல் சாகுபடியாகும் பதினாறு லட்சம் ஏக்கரும் நஞ்சை வயல்களாகும். புஞ்சைக் காடுகளில்தான் மாற்றுப் பயிர் முயற்சிகள் வெற்றி பெறும். தற்போதும் தஞ்சை - நாகை - திருவாரூர் மாவட்ட புஞ்சைக் காடுகளில் மாற்றுப் பயிர் சாகுபடி நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. தஞ்சைப் பகுதி நஞ்சைக்கு நெல்லைத் தவிர வேறு வழியே இல்லை என்பதுதான் நடைமுறை உண்மை!'' என்கிறார் காவிரி டெல்டா பாசன விவசாயிகள் நலப் பாதுகாப்புச் சங்கத்தின் செயல் தலைவரான மகாதான புரம் வி.ராஜாராம்.

மாற்றுப் பயிருக்கும் சாத்தியமில்லாமல், தண்ணீருக்கும் உத்தரவாதமில்லாமல் இரு தலைக்கொள்ளி எறும்பாகத் தவிப்பதுதான் இன்றைய காவிரி டெல்டா விவசாயிகளின் நிலைமை.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# மாற்றுப் பயிர் சாத்தியமா?



"நியூஸ் எதுவும் இல்ல... என்ன போடலாம்?"

"சிவாஜி படம் பார்க்கப் போய் டிக்கெட் கிடைக்காமல் திரும்பினவங்க போட்டோ போடுங்க..!"

- வசந்தா குருமூர்த்தி

# நான் அவ

"கேபிள் டி.வி.காரருக்கு இனிமே சந்தா பாக்கி வைக்காதீங்க!"

"ஏன்?"

"நாம எத்தனை மாசமா பணம் தரலைன்னு கேபிள் டி.வி.ல பேர் போட்டுக் காட்டுறார் பாருங்க!"

- அம்பை தேவா





"என் கணவரை இந்த ஹாஸ்பிட்டல்லதான் பறிகொடுத்தேன்!"

"ஏன்? ஏதாவது ஆபரேஷன்ல போயிட்டாரா?"

"இல்லை! ஒரு நர்ஸோட போயிட்டார்!"

- சேலம் எஸ்கா

''நான் எழுதுற ஜோக்குகளையெல்லாம் என் மனைவிதான் முதலில் படிப்பாள்.''

''அவங்களாவது சிரிப்பாங்களா ஸார்?''

- சரஸ்வதி பஞ்சு



# ...ன் இல்லை!



''அவன் மட்டும் நல்லா படிக்கிறானே! உன்னால மட்டும் ஏன் முடியலை?''

''நான் அவன் இல்லை சார்!''

- எஸ்.ராஜேஸ்வரி

''சர்வருக்கு அதிக டிப்ஸ் கொடுத்திருக்கக் கூடாது!''

''ஏன்?''

''வீட்டுக்கு போன் பண்ணி இன்னிக்கு ஹோட்டலுக்குச் சாப்பிட வரலியான்னு கேட்கறார்!''

- அம்பை தேவா



சிறிதும் பெரிதுமாய் முளைத்திருந்த தாவரத்துக்குக் கீழ் இருண்டு கிடந்தது நெலிகத்து மண். வேப்பம் பூவின் மெதுமெதுப்பில் மழைத் தூறல் சிதறிக் கொண்டிருந்தது. குடிசையின் இருளுக்குள் இருந்து வெளியே வந்தான் ஈசலன். அவனுக்கு வயிற்றின் குடல் நீளத்துக்கு பசி வந்து அதம் செய்துகொண்டிருந்தது.

ஈசலன் எப்பொழுதும் விரும்பி உண்பது கம்பங்களியும், சிறுக்கீரைக் குழம்பும்தான். இன்றைக்கும் நான்கு உருண்டைக் களியும், ஒரு சருவச் சட்டி கீரையும் தின்று வயிற்றை நிரப்பியிருக்கிறான். எத்தனை களி தின்றாலும் ஈசலனுக்குப் பசி அடங்குவதேயில்லை.

குழந்தைகளெல்லாம் மண் தின்பது சாதாரணம் தான் என்றாலும், மண் தின்றபடியே பிறந்தவன் ஈசலன். மோகினிகளின் பின் செல்லும் மதிகெட்ட மன்மதனைப் பற்றிய கெட்டவார்த்தைப் பாடலொன்றை, ஈசலன் அப்பா ஓங்கிப் பாடிக் கொண்டிருந்தார் ஒருநாள். நெல் நாற்று நட்டபடி அதைக் கேட்டுக் கொண்டிருந்த நிறைமாத கர்ப்பிணியான ஈசலனின் அம்மா வெட்கப்பட்டு வெகுண்டு சிரித்தாள். அந்தச் சிரிப்பு அடங்குவதற்குள் சேற்றுக்கு நடுவில் பிறந்தான் ஈசலன். அவன் மண் தின்றே பிறந்த பிள்ளையான சரித்திரம் இதுதான். அன்று முதல் பசி கொண்ட பூதம் ஆகாயத்தைத் தின்பது போல் வெறிகொண்டு மண் தின்று வளர்ந்த ஈசலனுக்கு வயது இப்பொழுது எழுபது. இப்பொழுது ஈசலனுக்கு மனைவியும் மண்ணும் வீடும் கிடையாது. ஆனால், லட்சம் லட்சமாய் சம்பாதிக்கும் ஒரு மகன் உண்டு.

கல்யாணம் செய்து வைக்கும் உயரத்துக்கு வளர்ந்திருந்த ஈசலனின் மகன் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்புதான் ஓடிப்போனான். கல்யாணத்துக்கு முதல் நாள் கட்ட வேண்டிய தாலியையும், கல்யாணப் பெண்ணையும் விட்டுவிட்டு, ஒரு வெள்ளாடு மேய்க்கிற பெண்ணை இழுத்துக்கொண்டு வேலி தாண்டி ஓடினான். தாலி பாக்கியம் கிட்டாத அந்தக் கல்யாணப் பெண் வருடம் முழுதும் மாலையும் கழுத்துமாய் அலைந்து தெருத் தெருவாய்ச் சபித்தாள். சாபத்தை வாங்காத மகன் இன்றுவரை இந்த மண்ணை மிதித்ததே இல்லை. ஈசலனுக்கு என்றைக்கும் இல்லாமல் இன்றைக்கு ஒரு ஆசை வந்தது. மகனை ஒருமுறை பார்த்துவிட்டு வந்தால் என்ன? மகனைப் பார்ப்பதற்குக் கால்நடையாய்க் கிளம்பிவிட்டான். மகன் இருப்பது நூற்றைம்பது மைல்கள் தள்ளி இருக்கிற ஒரு நகரத்தில்.



# இரண்டு

கடவுளுக்கு அடுத்த படியாக உலகமெல்லாம் நீக்கமற நிறைந்திருப்பது காற்றும், அதில் இருக்கிற தூசியும்தான். உயர்திரு

# எழில்வரதன்

# பொம்மைகள்!

ரகோத்தமனுக்கு தூசியையும் கடவுளையும் ஒரு சேரப் பிடிப்பதில்லை. கண்ணாடி மேசை மீது தூசி படிந்திருப்பதை ஞானக் கண்ணால் கண்டுபிடித்த ரகோத்தமன் 'யார்டி... அவ வெளியே?' என்று பொருள்படும் படியான ஆங்கில வார்த்தையை, கெட்ட வார்த்தைபோல உபயோகித்துக் கத்தினான். சீருடை அணிந்த பெண் ஒருத்தி உள்ளே வந்து 'ஐயா!' என்று சொல்லி ஆங்கிலத்தில் பயந்தாள்.

அந்தப் பெண்ணுக்குச் சுகாதாரம் குறித்தும், ஆரோக்கியம் குறித்தும் விளக்கமாய்ச் சொன்ன ரகோத்தமன், அவள் பிஞ்சு விரல்களை முரட்டுத்தனமாய்ப் பிடித்து இழுத்து தூசியைத் துடைத்துக் காட்டினான். மன்னிப்புக் கேட்டு தூசியைத் துடைத்த சீருடைப் பெண் அலுப்பாய் வெளியே வந்தாள். தலையில் செம்பட்டையும், உடம்பில் அழுக்குத் துணியும் உடுத்திக்கொண்டு ஒரு முதியவன் அனுமதியில்லாமல் உள்ளே நுழைவதை அவள் கண்டாள். அந்த முதியவன், நெலிகத்து ஈசலன். அவன் முடி பிடித்து நிறுத்திய சீருடைக்காரி, தடித்த வார்த்தையில் அதட்டினாள்.

நாட்டியக்காரியின் ஒப்பனையுடன் இருக்கிற ஒருத்தி, பெற்ற தகப்பனுக்கும் மகனுக்கும் நடுவில் நிற்கிறாள் என்றால், அவள் அவனுடைய மனைவியாகத்தான் இருக்கும் என்று நினைத்த ஈசலன், அந்தப் பெண்ணிடம் அன்போடு கேட்டான், ''நீதான் இப்ப என் பையனோட பொண்டாட்டியா? உன் புருஷன் வெள்ளாடு மேய்க்கிறவள ஓட்டிக்கிட்டு வந்தானே, அவ இப்ப எங்க?''

அந்தச் சீருடைப் பெண்ணுக்குப் பீறிட்டுக் கிளம்பியது கோபம். ஈசலன் கன்னத்தில் லப்பென்று அறைந்தாள்.

ஈசலன் கன்னத்தைப் பிடித்தபடி மீண்டும், ''உன்

புருசனை இப்ப நான் பாக்க முடியுமா, முடியாதா?'' என்று கேட்டு இன்னுமொரு முறை அடி வாங்கினான். சத்தம் கேட்டு வெளியே ஓடிவந்த ரகோத்தமன், தன் அப்பாவைப் பார்த்ததும் சந்தோஷமாய் கூவ ஆரம்பித்தான். அந்தச் சீருடைப் பெண் அதிர்ச்சியில் வாய் பிளந்தாள். ஆக மொத்தத்தில் சுத்தம் குறித்துக் கொஞ்சம் முன்பு வாய் கிழியப் பேசிய நிருவாளர் ரகோத்தமன் என்கிற சுத்த வெள்ளைக் கொக்கு, பிறந்து வளர்ந்ததெல்லாம் ஒரு சாக்கடைப் பன்றியின் முதுகின் மேல்தானா? சீருடைப் பெண் சத்தம் கேட்காமல் சாதுர்யமாக ஒரு கேவலச் சிரிப்பை மன நிறைவாகச் சிரித்துக் கொண்டாள்.

அப்பனை சொகுசுக் காரில் உட்கார வைத்து வீட்டுக்கு அழைத்துச் சென்றான் ரகோத்தமன். வெள்ளாடு மேய்த்த பெண் சீமை அழகிபோல் சிவப்பாக வாசலில் நின்றிருந்தாள். அவனுக்குப் பன்னி



ரண்டு வயதில் ஒரு மகனும், மூன்று பல் முளைத்த ஒரு பெண் குழந்தையும் இருந்தனர். ஈசலன் தன் பேத்தியை முதன் முதலாய்ப் பார்த்து 'ஈ' என்று சிரித்தான். மருமகளும் பேரப் பிள்ளைகளும் ஈசலனிடம் அன்பாக ஒட்டிக் கொண்டார்கள்.

ஈசலன் இங்கு வந்து ஏழு நாட்கள் முடிந்துபோயின. ஈசலன் வந்த காரணத்தை ரகோத்தமன் கேட்கவேயில்லை. வேறு வழி இல்லாமல் வந்த காரணத்தைத் தானே சொன்னான் ஈசலன். ''பையா, நான் பிறந்து வளந்த மண்ணு அப்ப என் கைய விட்டுப் போச்சி. இப்பத் திரும்ப வருது. அதை நீ வாங்கிக்குடு.''

ஈசலன் பிறந்தது நெல் வயல் சேற்றுக்கு நடுவில் என்பதும், அதைப் பங்காளி நாய்கள் பயமுறுத்தி பிடுங்கிக்கொண்டன என்பதும், இப்பொழுது வாழ்ந்து நாசமாய்ப் போன பங்காளிகள் பிச்சை கேட்க அச்சப்பட்டு பிடுங்கிய நிலத்தை விலைக்குத் தர ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்பதும் ரகோத்தமனுக்குத் தெரியும்.

''அப்பா, அங்க எதுக்கு நிலமும் வீடும்? நீ கடைசி வரையில் இங்கியே இருந்திடு'' என்றான் ரகோத்தமன்.

ஈசலன் கனவுபோலச் சிரித்தபடி பேசினான், ''பையா, நெலிகத்து மண்ணுல தொப்புள்கொடி அறுத்துக்கிட்டுப் பிறந்தேன். அதே மண்ணுல அண்ணாக்கயிறு அறுத்துக்கிட்டுச் சாகணும். அதான் என் ஆசை. பிறந்த மண்ணுங்கறது லேசுபட்ட விசயம் கிடையாது. கையவிட்டு அது போனாலும் உசிரை விட்டாவது வாங்கி அதுல ஒரு நாள் வாழணும் ஒரு மனுசன்.''

ரகோத்தமன் கடுப்பாகிவிட்டான். ''என் பையன் பொறந்தது கவர்ன்மெண்ட் ஆஸ்பிடல்ல. தொப்புள்கொடி அறுத்த இடம், புனித இடம். நானோ என் மகனோ அந்த இடத்தை வாங்க முடியுமா, சொல்லு! கிறுக்கனாட்டம் பேசிக்கிட்டு...'' ரகோத்தமன் பேசியதும் ஈசலன், பிறந்த மண் குறித்துப் பேச விரும்பவில்லை.

ஈசலன் வந்த பத்தாம் நாள் மூன்று பல் முளைத்த பேத்தி தன் தாத்தா தனக்குத் தராமல் எதையோ தின்பதாய் பிராது செய்தாள். ஈசலன் இரவெல்லாம் மறைத்து வைத்துத் தின்றது நெலிகத்தில் இருந்து

கொண்டு வந்த மண். அப்பன் தின்ற மண்ணை ஜீரணிக்க முடியாமல் உவ்வே என்று உமட்டிக் கொட்டினான் ரகோத்தமன்.

மகன் வாந்தி எடுத்தது தன் மீதா இல்லை, மண் மீதா என்று ஈசலனுக்குப் புரியவில்லை. "பையா, ஒருத்தன் செத்து அவனைத் தீயில் எரிச்சாலும் சரி, மண்ணுல பொதைச்சாலும் சரி அவனோட உயிர் ஆகாயத்துக்கும், உடம்பு மண்ணுக்கும்தான் போகும்." தகப்பன் சொன்ன அழுக்குத் தத்துவத்தைக் கேட்கிற மனோபாவத்தில் ரகோத்தமன் இல்லை.

அன்று இரவு ஈசலன் இருந்த அறைக்குள் இருந்து வரட் வரட் என்று பிராண்டும் சத்தமும், பல் கடித்துத் துப்பும் சத்தமும் வினோதமாய்க் கேட்டது. ஓடிப்போய் பார்த்தான் ரகோத்தமன். சுவரின் செங்கற்கள் பெயர்க்கப்பட்டு, தரையின் மார்பில்கள் உடைக்கப்பட்டிருந்தன. ஈசலனின் கைவிரல் நகம் மொத்தமும் பிய்ந்துபோய் ரத்தம் வழியக் கிடந்தது. வாயிலும் பல்லிலும் ரத்தமாய்க் கொட்டியது. அதிர்ந்து நின்றான் ரகோத்தமன்.

ஈசலன் சுவர் ஓரத்தில் பரிதாபமாய் உட்கார்ந்தபடி சொன்னான், "பையா, தின்னறதுக்கு ஒரு சொட்டு மண்ணு இங்க இல்ல. இந்த ஊர்ல கண்ணுக்குத் தெரிய மண்ணை எல்லாம் பொதைச்சி வெச்சிட்டாங்க. மண்ணு இல்லாத இடத்தில் மனுசன் நான் உயிர் வாழ மாட்டேன். சாகறத்துக்கு முன்னாடி என்னைப் போகவிடு, பையா." ஈசலன் கதற ஆரம்பித்தான்.

**ம**றுநாள் நெலிகத்தில் இருந்து சிலபேர் ஈசலனைப் பார்க்க வந்திருப்பதாய்ச் சொன்னார்கள். ஈசலன் இல்லாத ஊர் காய்ந்து சருகாகிக் கிடப்பதாகவும், வெள்ளாமை பாதியாகி பயமுறுத்துவதாகவும் பதறினார்கள். "எழுபது வயதுக் கிழவன் ஏர் பிடித்து உழுது விளைகிற பூமியா நெலிகத்து மண்?" என்று கேட்டான் ரகோத்தமன்.

"ஈசலன் ஏர் பிடிப்பவனும் இல்லை, நீர் பிடிப்பவனும் இல்லை! அவன் நாற்றும் நடுவதில்லை. களையும் பறிப்பதில்லை. நாங்கள் விளைகிற பூமிக்கு வந்து அவன் ஒரு பிடி மண் எடுத்துத் தின்பான். அந்த வருடம் பூமியில் நல்ல பூ பூப்பதையும், காய் காய்ப்பதையும், கதிர் விளைவதையும் நாங்கள் கண்டோம். அவன் உனக்குத் தகப்பனாகப் பிறப்பதற்கு முன்பே அந்த ஊரின் மண்ணுக்கு மகனாக பிறந்தவன். அதனால் ஈசலனை எங்களோடு அனுப்பி வை" என்று அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

சித்தன் போல உருவகம் பெற்ற தன் தகப்பனை வினோதமாய்ப் பார்த்தான் ரகோத்தமன். ஒரே மண்ணில் பிசைந்து உருவாக்கப்பட்ட பொம்மைகள்தான் இருவரும். ஆனால், நெலிகத்து மண் ஈசலனை விடாமல் தன்னுள் இழுத்துக் கொண்டே இருக்கிறது. அதே மண் ரகோத்தமனை உள்ளே கால் வைக்க விடாமல் விரட்டிக்கொண்டே இருக்கிறது. மண் செய்த மாயத்துக்குத் திகைத்தான் ரகோத்தமன். அவனால் ஒன்றும் பேச இயலவில்லை.

ஈசலன் போய் விட்டான். அவன் விட்டுச்சென்ற துணி முடிப்பில் இருந்த நெலிகத்து மண் எடுத்துத் தொட்டுப் பார்த்தான் ரகோத்தமன். அந்த மண்ணில் இருந்து அம்மாவின் வாசமும், கூடவே தாலிக் கயிற்றை ஏமாந்த ஒரு பெண்ணின் பித்துப் பிடித்த ஓலமும் கேட்பதை உணர்ந்து அதிர்ந்து நிமிர்ந்தான். ○



# வாரம் ஒரு பாசுரம்

# சுஜாதா

வழக்கொழிந்து போன பல அழகான சொற்களை மறுபடி நோக்கி ஒரு இலேசான பெருமூச்சு விடுவதற்கான வாய்ப்புகள் ஆழ்வார் பாசுரங்கள் பலவற்றில் உள்ளன.

'திறம்புதல்' என்ற சொல்லைக் கொஞ்சம் கவனிக்கலாம். இதற்குத் தப்புதல் என்பது பொருள். இதன் எதிர்ப்பதம் திறம்பாமை. திறம்பாத கடல் என்றால் அலையடித்துச் சலிக்காத கடல். திறம்பாத உலகம் - சலியா திருக்கிற உலகம், திறம்பாது - நான் சொல்வதை என்றால் தப்பாமல், தவறாமல்... இப்படித் தீர்மானிக்கப்பட்ட நெறியிலிருந்து தவறாமையைக் குறிக்கும் வார்த்தை இது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் இதனை அத்தனை வேறுபட்ட பொருள்களிலும் ஒரே பாசுரத்தில் பயன்படுத்தியுள்ளார்.

''திறம்பாமல், மண் காக்கின்றேன்
யானே என்னும்;
திறம்பாமல், மலை எடுத்தேனே
என்னும்;
திறம்பாமல், அசுரரைக்
கொன்றேனே என்னும்;
திறம் காட்டி, அன்று ஐவரைக்
காத்தேனே என்னும்
திறம்பாமல், கடல் கடைந்தேனே
என்னும்;
திறம்பாத கடல்வண்ணன்
ஏறக்கொலோ
திறம்பாத உலகத் தீர்க்கு என்
சொல்லுகேன் -
திறம்பாது என்திரு மகள் எய்தினவே?''

ஒரு தாய் தன் மகள் மேல் கண்ணன் வந்து என்ன என்னவோ பிதற்றுகிறாளே என்று கவலைப்படுவதாகப் பத்துப் பாடல்களின் வடிவில் ஆழ்வார், பகவத்கீதையின் 18ஆவது அத்தியாயக் கருத்துகள் அத்தனையையும் அழகாகச் சொல்லிவிடுகிறார்.

இந்தப் பெண் நான்தான் பூமியைத் தவறாமல் காக்கிறேன் என்கிறாள். நான்தான் மலையைத் தூக்கினேன் என்கிறாள். அசுரனைக் கொன்றேன் என்கிறாள். என் திறமையைக் காட்டி அன்று பாண்டவர்களைக் காப்பாற்றினேன் என்கிறாள். பாற்கடலைக் கடைந்ததும் நான்தான் என்கிறாள். அலை ஓயாத (திறம்பாத) கடல் வண்ணனான திருமால் வந்து புகுந்ததால் இது நிகழ்ந்ததா! தவறு செய்யாத (திறம்பாத) உலகத்தவர்களுக்கு என்ன சொல்வேன். என் மகளுக்குத் தப்பாது (திறம்பாது) இது வந்துவிட்டதே. ஏழுமுறை இந்தச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் ஆழ்வார் - ஏழு முறையும் திறம்பாமல்.

(படிக்கலாம்)



# நானுமல்ல... நரியுமல்ல...

அமரர் கல்கி

உலகிலேயே செவிக்கினிய குரல் எந்தப் பிராணியினுடையது என்று என்னைக் கேட்டால், கழுதையினுடைய குரல்தான் என்று சொல்வேன். நீங்கள் நகைக்கலாம்! ஆனால், கழுதையின் கத்தலைப் போல் சிறந்த சகுனம் வேறில்லையென்பது உங்களுக்குத் தெரியுமா? வாழ்நாளில் காரியசித்தி பெறுவதற்குக் காரணமாயிருக்கும் கழுதையின் குரல் இனியதினும் இன்ப சங்கீதமாய் ஏன் இருக்காது? கர்த்தபசுரத்தின் தனிப்பெருஞ் சிறப்பு இதுவேயாகும்; வாழ்க்கையில் அடிக்கடி தோல்வியடைந்து கஷ்டப்படுவோர் நான் சொல்வதைக் கேளுங்கள். கழுதைகள் நிறைய வளர்க்கும் வண்ணார் வீட்டுக்குப் பக்கத்தில் சென்று குடியிருங்கள்; நீங்கள் காரியசித்தி பெறுவது திண்ணம்.

குதிரைப் பந்தயக் கடைகளில் தினந்தோறும் பணம் தோற்றுவிட்டு, 'மூன்றாம் பேஸ்' வைத்த முகத்துடன் வீடு திரும்பும் நண்பர்களுக்கு ஒரு யோசனை கூறுகிறேன். இக் காலத்தில் சில பெரிய மனிதர்கள் புனுகுப் பூனை, முயல்குட்டி, நாய்க்குட்டி போன்ற பிராணிகளைப் பிடித்துச் செல்லமாய் வளர்க்கிறார்கள். இவர்கள் விஷயம் தெரியாதவர்கள். நீர் எங்கேனும் சென்று, எப்பாடாவது பட்டு, ஒரு நரியைப் பிடித்துக்கொண்டு வந்து, கூண்டில் அடைத்து வளர்த்து வாரும். தினம் காலையில் எழுந்ததும் அதன் முகத்தில் விழித்துவிட்டு வெளியே கிளம்பும். அன்று நீர் பந்தயத்தில் ஜெயிக்காவிட்டால் என்னைக் கேளும் இல்லை, நரியைக் கேளும். ஆனால் ஒன்று ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்... நீர் நரி முகத்தில் விழித்தெழுந்தாலும், புறப்படும்போது பூனை குறுக்கே போய்விட்டால் உமது தோல்விக்குப் பொறுப்பாளி நானுமல்ல, நரியுமல்ல. ஆகையால் வீட்டில் பூனைக் குட்டிகள் ஏதேனும் இருந்தால், முதலில் அடித்துத் துரத்திவிடும்.

இவ்வளவு தூரம் எழுதியான பிறகு என் சொந்த அனுபவத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் குறிப்பிடாமல் விட மனம் வருமா? நான் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தபோது, என் சிற்றன்னையின் வீட்டில் சில நாட்கள் இருக்க நேர்ந்தது. அந்த அன்னையின் புதல்வன் மணி என்பவன் இரண்டாவது பாரத்தில் படித்துக்



கொண்டிருந்தான். தினசரி பையன் பள்ளிக்கூடம் போகும் போதுகூடச் சகுனம் பார்த்துத் தான் அனுப்பி வைப்பாள். பரீட்சை தினமன்று சிற்றன்னை காலையில் அவசர அவசரமாக பையனைக் குளிப்பாட்டி, சாதம் போட்டு, உடை உடுத்தி விட்டாள். இதற்குள் மணி பத்து ஆகிவிட்டது. பையனை உள்ளே இருக்கச் செய்து, வாசலில் வந்து பார்த்து விட்டு, ''வா வா! யாரும் வரவில்லை. ஓடிவா!'' என்றாள் தாயார். ஆனால் பையனுக்குக் கொஞ்சம் சுறுசுறுப்பு அதிகம். அவன் வாசற்படிக்கு வருவதற்குள், ''உள்ளே போ, கொஞ்சம் தண்ணீர் சாப்பிடு!'' என்று தாயார் கூறினாள். நான் வாசலில் போய்ப் பார்த்தபோது, விதவை ஒருத்தி சந்து திரும்பி வந்து கொண்டிருந்தாள். அடுத்த முறை பையன் கிளம்பும்போது ஒற்றைப் பிராமணர் ஒருவர் வந்தார். என் சிற்றன்னை பிராம்மணாபிமானம் நிரம்ப உள்ளவள்தான். ஆனால், அந்தப் பிராமணருக்கு அன்றைய தினம் அவள் கொடுத்த சாபங்களில் ஏதாவது பலித்தால் கூடப் போதும்; அந்த மனிதருடைய உயிரை எந்த துரதிர்ஷ்டம் பிடித்த கம்பெனியாவது இன்ஷ்யூர் செய்திருந்தால், அது வாயில் மண்ணை வாரிப் போட்டுக்கொள்ள வேண்டியதுதான்.



இதற்குள் பத்து அடித்து இருபது நிமிஷம் ஆகிவிட்டது. கடைசியாக, ''அப்பா, ஓடிவா! தண்ணீர்க் குடத்துடன் சுமங்கலி வருகிறாள். திவ்யமான சகுனம்'' என்று தாயார் கூவினாள். பையன் அவசரமாகப் புறப்பட்டுச் சென்றான். சந்து திரும்பும் வரையில் மேற்படி சுமங்கலியைத் தவிர வேறு யாரும் எதிர்ப்படவில்லை. ''நல்ல பேஷான சகுனம். குழந்தை நூற்றுக்கு நூறு மார்க்கு வாங்குவான், பார்!'' என்றாள் குதூகலத்துடன். ஆனால், சகுனத்தின் பலன் இப்படியாகுமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. கால்மணி நேரம் ஆனதும், பையன் போனதுபோலத் திரும்பி வந்துவிட்டான். எங்களிருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. ''என்ன? என்ன?'' என்று இருவரும் ஏக காலத்தில் கேட்டோம். ''நான் போவதற்குள் மணி அடித்து 15 நிமிடம் ஆகிவிட்டது. ஆகையால் பரீட்சை எழுத விடமாட்டேன் என்று வாத்தியார் சொல்லிவிட்டார்'' என்றான் பையன்.

- கல்கி கட்டுரைகள் 3-லிருந்து...
மணிவாசகர் பதிப்பகம்

**சகுனத்தின் பலன் இப்படியாகுமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. கால் மணி நேரம் ஆனதும், பையன் போனதுபோலத் திரும்பி வந்துவிட்டான்.**

**சா**னியா மிர்ஸா பரபரப்பூட்டிய காலம் எல்லாம் போய் விட்டது. அவர் மைதானத்தில் இறங்கினால் செய்தி; மைதானத்தை விட்டுத் தள்ளி நின்றால் செய்தி; காணாமல் போனாலும் செய்தி. வாஸ்தவம்தான். ஆனால், இவர் ஜூனியர் போட்டிகளிலிருந்து விலகி சீனியர்களுடன் கோதாவில் இறங்கி மூன்று ஆண்டுகளாகிவிட்டன. இன்னமும் ஆரம்ப நிலையில்தான் இருக்கிறார். இந்திய டென்னிஸின் புயல், சுனாமி, ஆக்டோபஸ் என்றெல்லாம் வர்ணிக்கப்படுகிறவர். சானியா மிர்சா தனது இருபதாவது வயதில் எந்தத் திசையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார், எந்த இலக்கை அடையத் துடித்துக் கொண்டிருக்கிறார்? ஒரு சுற்று பார்ப்போமா!



சர்ச்சைகள்:

● குட்டைப் பாவாடை அணிந்து ஆடக்கூடாது என்று முஸ்லிம் அமைப்புகள் கண்டனம் தெரிவித்தன.

● சில வருடங்களுக்கு முன்பு பெங்களூரில் நடந்த டபிள்யூ.டி.ஏ. டென்னிஸ் போட்டியில் இஸ்ரேலைச் சேர்ந்த ஷஹர் பியருடன் இரட்டையர் ஆட்டத்தில் ஆடுவதாக இருந்தார். ஆனால், ஒரு முஸ்லிம் பெண் யூத இனத்தைச் சேர்ந்த இன்னொரு பெண்ணுடன் இணைந்து ஆடுவதை முஸ்லிம் அமைப்புகள் ஒப்புக்கொள்ளவில்லை. உடனே ஷஹருடன் ஆடுவதை விட்டுவிட்டார். ஆனால், இப்போது விம்பிள்டனில் மீண்டும் அவருடன் ஜோடி சேர்ந்திருக்கிறார்.

● திருமணத்துக்கு முன்பு பாலியல் உறவு வைத்துக்கொள்வது தொடர்பான சர்ச்சையிலும் சிக்கினார். ஆனால், பிறகு 'அதுபோல் சொல்லவே இல்லை' என்று விளக்கம் கொடுத்தார். 'சானியா மிர்சா விளம்பரங்களில் நடிப்பதைக் குறைத்துக்கொள்ள வேண்டும்' என்று ஷாருக்கான் அறிவுறுத்தினார். உடனே ஷாருக்கானுக்கு எதிராகப் பேட்டி கொடுத்தார்.

● சானியா சினிமாவில் நடிக்கப் போகிறார் என்றொரு தகவலும் உண்டு. 'நான் சானியாவை நேரில் சந்தித்துப் பேசினேன்' என்கிறார் சிம்பு. ஆனால், சானியா எல்லாவற்றையும் ஒரேயடியாக மறுத்தார்.

● லியாண்டரும் மகேஷ் பூபதியும் பிரிவதற்கு இவரும் ஒரு மறைமுகக் காரணம். ஆசியன் கேம்ஸில் இவர் லியாண்டருடன் ஆட வேண்டும் என்கிற டென்னிஸ் அமைப்பின் முடிவை எதிர்த்தார் மகேஷ் பூபதி. அந்தப் போட்டியில் லியாண்டருடன் சேர்ந்து ஆடி தங்கம் வென்றார். இப்போது மகேஷுடன் இணைந்து கலப்பு இரட்டையர் ஆட்டத்தில் ஆடிக்கொண்டிருக்கிறார் சானியா!

● ஹைதராபாத்தில் அகாடமி அமைக்க ஆந்திர முதல்வரிடம் இலவச நிலம் கேட்டார் என்றொரு குற்றச்சாட்டு. ஏற்கெனவே ஆந்திர அரசு ஒரு கோடி ரூபாய் நிதி உதவியும் ஜுப்லி ஹில்ஸில் 4500 சதுர அடி நிலமும் கொடுத்திருக்கிறது. ஆனால், இந்தச் செய்தியை மறுத்தார் சானியா. 'இதுபோல குற்றம் சுமத்துபவர்களால் நாட்டில் டென்னிஸ் வளராமல் இருக்கிறது' என்று பதிலடி கொடுத்தார்.

**காத்திருக்கும் சவால்கள்:**

★ காயத்திலிருந்து மீண்டு இப்போது ஆட வந்திருக்கிறார் சானியா. அதற்குள் உலகம் தலை கீழாக மாறிவிட்டது. 32-ஆவது ரேங்க் எடுத்திருந்தவர் இப்போது 44-ல் நிற்கிறார்.

★ அடிக்கடி பயிற்சியாளர்களை மாற்றிக் கொண்டிருக்கிறார். உலகிலேயே முதல் நிலை கோச்சாக இருந்தாலும் ஒரு வீரரைப் புரிந்துகொள்ள, குறைந்தது மூன்று மாதங்களாவது ஆகும். ரெடி டு ஈட் மாதிரி சானியா உடனடி பலன்களை எதிர்பார்ப்பதால் அவரிடம் எந்தப் பயிற்சியாளரும் நீடிப்பதில்லை.

★ சானியாவின் பலம் புல்வெளியா, செம்மண் தரையா என்று இன்னமும் தெளிவாக வில்லை. நவீன ஆட்டங்களில் முக்கிய உத்தியாகக் குறிப்பிடப்படுவது சர்வீஸ். சமீபத்திய விம்பிள்டன் போட்டியில் சானியாவைக் கவிழ்த்ததும் இதுதான்.

★ செர்பிய நாட்டுப் பெண்ணான அனா இவனோவிக், சென்ற மாதம் நடந்த பிரெஞ்ச் ஓபன் போட்டியில் இறுதி வரை முன்னேறினார். இவரது வயது பத்தொன்பது. இவரைத் தவிர உலகின் முதல் பத்து இடங்களில் உள்ள மரியா ஷெரபோவா, அனா செக்வேடாட்ஸ், நிகோல் வடிசோவா போன்ற வீராங்கனைகளும் இருபது வயதுக்கு உட்பட்டவர்களே. இருபது வயதான சானியா இவர்களைப் பார்த்து நிறைய கற்றுக் கொள்ள வேண்டும்.

**செய்யவேண்டியவை:**

★ பேச்சைக் குறைத்து செயலில் தீவிரம் காட்ட வேண்டும். ஏதாவதொரு கிராண்ட்ஸ்லாமில் குவார்ட்டர் ஃபைனல் வரைக்குமாவது சென்று வர வேண்டும்.

★ எல்லா சர்ச்சைகளுக்கும் மைக் முன்னால் நின்று பதில் சொல்வதைத் தவிர்க்க வேண்டும்.

★ ரசிகர்களைச் சோர்வடையச் செய்வது ஒரு விளையாட்டு வீரருக்கு அழகல்ல. கவனச் சிதறல்களையெல்லாம் உதறிவிட்டு திறமையான பெண், நம்பகமான வீரர், உழைப்பதற்குத் தயங்காதவர், தொடர் வெற்றிகளுக்குச் சொந்தக்காரர் என்று பெயரெடுப்பதுதான் சானியாவின் இப்போதைய பிரதான நோக்கமாக இருக்க வேண்டும்.

# சானியா சாதித்தது என்ன?



**- ச.ந.கண்ணன்**




"என்ன ஸார் லேட்...? -தூக்கமா, துயரமா?" என்று நண்பர்கள் கேட்க, "தூக்கத்தைக் கெடுக்க துயரம் முயற்சி செஞ்சாலும் நான் விடுறதில்லையே..." என்று உற்சாக பதிலளித்து, சென்னை, மைலாப்பூர் நாகேஸ்வரராவ் பூங்காவில் காலை நடையைத் துவங்குகிறார் காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி.

சென்னையில் இருந்தால் காலை சரியாக ஆறரை மணிக்கே டீ-ஷர்ட், ஷார்ட்ஸ் மற்றும் ஷூ அணிந்துகொண்டு வாக்கிங் கிளம்பி விடுகிறார் கிருஷ்ணசாமி. முதல் அரை மணி நேரம் வீட்டைச் சுற்றியிருக்கும் தெருக்களில் வாக்கிங்







# நழுவிச் சென்ற எம்.பி. சீட்!

## சோகத்திலும் மகிழ்ச்சியுடன் கிருஷ்ணசாமி

செல்கிறார். படுவேகத்தில் நடை! பத்து நிமிடங்களுக்குள் வியர்த்து விறுவிறுத்துப் போகிறது.

"முன்பு காரில் கடற்கரைக்குச் சென்று அங்கே வாக்கிங் போய்க் கொண்டிருந்தேன். அப்போது முன்னாள் அமைச்சர் ராஜாராமுடன் சேர்ந்துகொண்டு பீச் வாக்கர்ஸ் சங்கத்தை உருவாக்கியதில் எனக்கும் ஒரு பங்கு உண்டு. இப்போது தான் சில வருடங்களாக வீட்டைச் சுற்றி வாக்கிங்" என்கிறார்.

கிருஷ்ணசாமி ஒரு பழுத்த காங்கிரஸ்காரர். 1967-ல் காமராஜரால் கண்டெடுக்கப்பட்டு, பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு வென்றவர். சொந்த ஊர் செய்யாறு பக்கம். சட்டக் கல்லூரியில் பயின்றவர்.

"படித்து முடித்து காங்கிரஸ் பிரமுகர் மணிவர்மாவிடம் ஜூனியராக இருந்தேன். அதன் பின் தனியாக பிராக்டீஸ் செய்தேன். சீனியர் வழக்கறிஞராக இருந்து பின்னாட்களில் சென்னை உயர்நீதிமன்றம், உச்சநீதிமன்றம் ஆகியவற்றில் நீதிபதியாக இருந்து மறைந்த நீதியரசர் ஸ்ரீநிவாசன், எனது வழிகாட்டிகளில் ஒருவர்" என்று பெருமை பொங்கச் சொல்கிறார் கிருஷ்ணசாமி. இவரது மகள் செளம்யா, மத்திய அமைச்சர் அன்புமணியின் மனைவி. மகன் விஷ்ணு பிரஸாத், செய்யாறு தொகுதி காங்கிரஸ் எம்.எல்.ஏ.

"உங்கள் ஆரோக்கியம் எப்படி இருக்கிறது? உங்கள் கட்சி ஆரோக்கியம் எப்படி இருக்கிறது?" என்றால் சிரிக்கிறார்.

"காங்கிரஸை வளர்ப்பதைப் பற்றிக் கவலைப்படாமல், ஒரு கும்பல் தேர்தலுக்குத் தேர்தல் டெல்லியில் சீட்டுகளை வாங்கி, கூட்டணி பலத்தால் ஜெயித்து விடுகிறது. அவர்களால் கட்சிக்கு எந்தப் பலனும் இல்லை. நான் தலைவரானவுடன் கிராம அளவில் பூத் கமிட்டி அமைக்க முயன்றேன். அதற்குச் சரியான ஒத்துழைப்பு இல்லை. சென்னையில் இருக்கும் போது சத்தியமூர்த்தி பவனுக்குச் சென்று விடுவேன். நான் கட்சி அலுவலகத்துக்கு வருவதேயில்லை என்று என் மீது புகார் அனுப்புகிறார்கள். இப்படிப்பட்ட அழுத்தங்கள் காரணமாக சமீபத்தில் எனக்கு இரத்தக் கொதிப்பே

வந்து விட்டது'' என்று படபடப்பாகச் சொல்லி முடிக்க, முகம் வியர்த்துப் போகிறது.

இதற்குள் ஆறு, ஏழு ரவுண்டுகள் வந்து விட்டபடியால், அவருடைய நண்பர்கள், ''வாங்க ஸார், வழக்கம்போல் உட்கார்ந்து கொஞ்சம் அரட்டை அடிக்கலாம்'' என்கிறார்கள். தெருக்களில் விளக்குகள் எரியாததிலிருந்து, ஜனாதிபதி தேர்தல் வரை எல்லா விஷயங்களும் அலசப்படு கின்றன. காங்கிரஸ் கட்சியைக் கிண்டல் செய்வதைக் கூட நட்பின் அடிப்படையில் கேட்டுப் புன்னகைக்கிறார் கிருஷ்ணசாமி. ''இங்கும் வாக்கர்ஸ் சங்கம் உண்டு. வருடத்துக்கு இரண்டு, மூன்று முறை குற்றாலம், திருப்பதி என்று கிளம்பி விடுவோம். ஏழை மாணவ, மாணவி களுக்கு நிதி உதவியும் செய்கிறோம்'' என்கிறார்.

**பூ**ங்காவிலிருந்து கிளம்பி வீட்டை அடைந்ததும், வாசல் பக்கம், செடி கொடிகளை ஒட்டியுள்ள இடத்தில் கைகளை உயர்த்தியும், நீட்டியும் சிறு உடற்பயிற்சி. பின்னர் பத்திரிகைகளில் ஒரு பார்வை. இதற்குள் செல்ஃபோனில் அழைப்புகள் வரத் துவங்குகின்றன. ''கிராமத்திலிருக்கும் சாதாரணத் தொண்டர் கூட என்னிடம் பேசுகிறார். காரணம், மற்ற தலைவர்களைப் போல் செல்ஃபோனை உதவியாளர்களிடம் கொடுக்காமல், நானே பேசுவதால்தான்!'' என்று சொல்லும் கிருஷ்ணசாமி, மிகுந்த கடவுள் நம்பிக்கை உள்ளவர். குளித்துவிட்டு ஒரு வேட்டியை மட்டும் சுற்றிக் கொண்டு பூஜை அறையில் பத்து நிமிடங்கள் கண்களை மூடியவாறு தினசரிப் பிரார்த்தனை.

''நமக்கு உணவுக் கட்டுப்பாடு என்று எதுவும் கிடையாது. ஆனால், என் உடல் நலத்தில் அக்கறை கொண்ட என் மனைவி உப்பு, காரம், எண்ணெய் குறைத்தே சமையல் செய்கிறார்'' என்கிறார்.

''சமீபத்தில் நடந்து முடிந்த ராஜ்ய சபைத் தேர்தலில் ஸீட் கேட்டீர்களாமே...'' என்றதற்கு, ''அதில் என்ன தப்பு இருக் கிறது? மாநில காங்கிரஸ் தலைவர்களுக்கு ராஜ்ய சபை ஸீட்டுகள் கொடுப்பது காங்கிரஸில் வழக்கமான ஒன்றுதானே! சிலர் செய்த சதியின் காரணமாக அது நழுவிப் போனது'' என்கிறார்.

இதற்குள் உதவியாளர்கள் வந்து ''ஸார், விமான நிலையத்துக்குப் போகணும், நேரமாச்சு'' என்கிறார்கள். தயாராக இருக்கும் காலை உணவைக்கூட சாப்பிடா மல், பாதுகாப்பு அமைச்சர் ஏ.கே.அந் தோணியை வரவேற்கக் கிளம்புகிறார் கிருஷ்ணசாமி.



**“என் மீது ஏராளமான புகார்களை அனுப்புகிறார்கள். அதனால், எனக்கு இரத்தக் கொதிப்பே வந்துவிட்டது!”**

- ஸ்ரீநி

படங்கள்: ராஜன்

**சங்கீதா:**

'**உ**யிர்' படத்துல அண்ணி கேரக்டர்ல நடிச்சதுலேர்ந்தே என் மேல, நான் நடிக்குற கேரக்டர் மேல ரசிகர்களுக்கும், ஏன் எனக்கே கூட எதிர்பார்ப்பு வந்துடுச்சு. அதனால ரொம்ப கவனமா தேர்ந்தெடுத்து பண்றேன். மாதவன்கூட 'எவனோ ஒருவன்' நல்லா வந்திருக்கு. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய இன்னொரு படம் தனம். இதுல நான் தாசியா நடிச்சிருக் கேன். டைரக்டர் சிவா கதை சொன்னதும் கப்புனு ஒப்புக் கிட்டேன். இதுக்கு முன்னாடி பலர் இந்த மாதிரி கேரக்டர் பண்ணியிருந்தாலும் இந்தப் படத்துல ஒரு ஸ்பெஷா லிடி இருக்கு. அந்த மானரிஸம், மாடுலே

# தாசியாக நடிக்கத் தயக்கமில்லை!

**பிரபுதேவா:**

'**போ**க்கிரி' எனக்குத் தமிழ்ல மறுபடியும் ஒரு மகத்தான இடத்தைக் கொடுத்திருக்கு. அடுத்து தெலுங்கு சூப்பர் ஸ்டார் சிரஞ்சீவியை வச்சு 'ஷங்கர் தாதா ஜிந்தாபாத்' பண்றேன். அது முடிஞ்சதும் தமிழுக்கு வர்றதாத்தான் இருந்தேன். ஆனா 'போக்கிரி'ய இந்தியில சல்மான்கான் சாரை வச்சுப் பண்ற வாய்ப்பு கிடைச்சிருக்கு. இனி நடிப்பேனான்னு பலரும் கேக்கறாங்க. கண்டிப்பா நடிப்பேன். இதுக்கு முன்னாடி ஏனோதானோன்னு இருந்துட்டேன். ஆனா போக்கிரி என்னைப் பக்குவப்படுத்தியிருக்கு. அந்த அனுபவத்தோட அட்டகாசமா வருவேன், பாருங்க. டான்ஸையும் நான் விடப் போறதில்லை. அதுதான் என் உயிர்! இன்னைக்கும் அப்பப்ப கொரியோகிராபி பண்ணிட்டுதான் இருக்கேன். டைரக்ஷன்ல நான் குதிச்சதும் 'இவனுக்கு ஏன் இந்த வீண் வேலை'ன்னு பலர் என் காதுபடவே பேசினாங்க. ஆனா என் தன்னம்பிக்கையும் உழைப்பும் எல்லாத்தையும் மாத்திக் காட்டிடுச்சு.

# போக்கிரி புகட்டிய பாடம்!

ஷன் ரொம்ப இயல்பா வந்திருக்கு. ஷூட்டிங் ஸ்பாட் போனா ஆளே அடையாளம் தெரியாத அளவுக்கு மாறிடுறேன். ரசிச்சு பண்றேன் ஒவ்வொரு ஷாட்டையும். தாசியா நடிக்கறதை நான் ஒண்ணும் தவறா நினைக்கல. முகம் சுளிக்கற மாதிரியோ, யாரும் தப்பா சொல்ற மாதிரியோ என் கதாபாத்திரம் இருக்காது. படம் வந்ததும் பாருங்க, என் நடிப்புக்கு என்ன ரெஸ்பான்ஸ் கிடைக்கப் போகுதுன்னு. இது தலைக்கனம் இல்லீங்க... தன்னம்பிக்கை.''

# பெண்கள் என்னை வெறுக்கிறார்களா?

**ஜீவன்:**



''திருட்டுப் பயலே', 'நான் அவனில்லை' என்று தொடர்ந்து பெண்களை ஏமாற்றும் கேரக்டர்களில் நடித்ததால் இப்படியொரு கேள்வி உண்டாகியிருக்கும் என்று நினைக்கிறேன். நான் ஏற்கும் பாத்திரங்கள்தான் அப்படியென்றாலும் அடிப்படையில் நான் ரொம்ப சாது. பெண்கள் என்றாலே மிரண்டு ஓடுவேன். ஒன்று தெரியுமா? எனக்குப் பெண் ரசிகைகள்தான் அதிகம். பெண்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டுமென்கிற நோக்கமும் என் கதாபாத்திரத் தேர்வில் உண்டு. அடுத்து 'மச்சக்காரன்' செய்கிறேன். முந்தைய படங்களிலிருந்து மிகவும் மாறுபட்ட ஸ்கிரிப்ட். டைரக்டர்: தமிழ்வாணன். ஆடியன்ஸுக்கு நல்லவனாகத் தெரிவேன். கூட நடிக்கறவங்களுக்குக் கெட்டவன். பாதி சிட்டி, மீதி வில்லேஜ் என்று கலந்து கட்டி அடிச்சிருக்கேன். இந்தப் படம் பெண் ரசிகைகள் எண்ணிக்கையை நிச்சயம் எனக்கு உயர்த்தும். என்னைக்கும் நான் என் ரசிகர்களுக்குக் கடமைப்பட்டிருக்கேன். அவங்க இல்லையென்றால் நான் இல்லை. அதனால் அவங்க என்னை வெறுக்கறாங்கன்ற பேச்சுக்கே இடமில்லை!''

தொகுப்பு: **சித்ரா**

# பெண்களுக்குப் பிடித்த ஆண் யார்?



★ ரங்கராஜன், டெல்லி

**பெண்ணுக்குப் புடவை அழகா....? புடவைக்குப் பெண் அழகா....?**

பெண்ணுக்குப் புடவையும் ஓர் அழகு.... புடவைக்குப் பெண்தான் அழகு.... அல்லவை ஷண்முகி விதிவிலக்கு....

★ த.சத்தியநாராயணன், அயன்புரம்

**ஹெல்மெட்-இதைப் பற்றி நகைச் சுவை சம்பவம், கவிதை சொல்ல முடியுமா....?**

நானும், எனது பக்கத்து வீட்டுக்காரர் ஓவியர் மணியம் செல்வனும், யாரையும் காக்காய்ப் பிடிப்பதில்லை. அதனால்தானோ என்னவோ, எங்கள் இருவரையும் காக்காய் களுக்குப் பிடிப்பதில்லை. காலையில் மொட்டை மாடியில் வாக்கிங் போகும் போது, எங்கள் தலையில் தனது மோதிர அலகால் குட்டிப் புண்ணாக்கிவிட்டுப் பறந்து, மரக்கிளையில் அமர்ந்து 'காக் கைக்குத் தன் குட்டு புண் குட்டு' என்கிற ரேஞ்சில் சக-காக்கைகளிடம் பீற்றிக் கொள் கின்றன. இந்த அவஸ்தையை சமாளிக்க நானும், ம.செ.வும் ஹெல்மெட் போட்டுக் கொண்டு வாக்கிங் போகிறோம். பூலோகத் தில், எனக்குத் தெரிந்து ஹெல்மெட் அணிந்து நடப்பவர்கள் நாங்கள் இருவரா கத்தான் இருப்போம். ஹெல்மெட் போட் டுக்கொண்டு விட்டோம் என்பதற்காக ஸ்கூட்டரில் வாக்கிங் போக முடியுமா....? அப்படியே போனாலும் மொட்டை மாடி யில் ஸ்கூட்டர்விட முடியுமா? 'காக்கை, குருவி எங்கள் ஜாதி' என்று பாடிய பாரதியார், எங்கள் காலனியில் குடியிருந் தால் தலைப்பாகைக்குப் பதிலாக ஹெல் மெட் அணிந்து 'காலையில் செய்கின்ற வாக்கை-கெடுக்கப் பறக்குதடா காக்கை-தாழப் பறந்து தன் மூக்கால்-தலையில் குட்டுதடா நேக்காய்' என்று பாடி யிருப்பார்.

★ ஜெகா, கும்பகோணம்

**காலிஃப்ளவரை ஏன் காலிப்பூ என்று சொல்வதில்லை....?**

சொல்லித்தான் பார்ப்போமே என்று

# கிரேஸியைக் கேளுங்கள்!



நேற்று மார்க்கெட்டுக்கு சென்றேன். அங்கு என்னைப் போல் தமிழில் கறிகாய் வாங்க வந்த ஒருவர், கடைக்காரனிடம் 'பெண் களின் விரல் அரை கிலோ போடுப்பா' என்று லேடீஸ்-ஃபிங்கர், வெண்டைக் காயைக் கேட்க... உடனே கடைக்காரன், 'சாமி.... என்ன நரமாமிச பட்சிணியா...? இல்லை நக்கல் பண்ண வந்தியா....? என்னை என்ன காதுல காலி-பூ வச்சவன்னு நெனச்சியா....?' என்று கெட்ட வார்த்தை யில் தொடர... நான் சந்தடி செய்யாமல் 'கனியிருக்கக் காய், பூ கவர்ந்தற்று' என்ற பாலிஸியோடு பழக்கடைக்குத் தாவி னேன்.

★ சிவா, பாளையங்கோட்டை

***செக்ஸ்.... அசிங்கமானதா....? புனித மானதா....?***

சிலர் எப்போதும் செக்ஸ்ஸையே விரும்புவார்கள்.... சிலர் கட்டம், கிட்டம் போடாத ப்ளெய்ன் ஷர்ட்டைத்தான் அணி வார்கள்.... ஓ... சிவா சார்.... ஸாரி நீங்க கேட்டது ஸெக்ஸா.... வள்ளுவனின் காமத் துப் பால் படித்தால் புனிதம் புரியும். அந் தப் பாலே திரிந்து கெட்டுப் போனால்.... பால் பலானதாகி அசிங்கமாகும்.

★ எஸ்.ராஜமழை, சின்னமனூர்

***ஒரு பெண்ணுக்கு எப் படிப்பட்ட ஆணைப் பிடிக்கும்....?***

ஆ ணை யி டா த ஆணைப் பிடிக்கும்....

★ என்.சண்முகம், திருவண்ணாமலை

***நீங்கள் அப்பாவிடம் 'அடி' வாங்கியது உண்டா...?***

செல்லமாக 'அங்குலம்' கூட வாங்கியது கிடை யாது.... அன்புதான் மகன்-தந்தை உற வுக்கு அடிப்படை..... அதனால்தான் இந்த ஐம்பது வயதிலும், எனது அப்பாவின் அன்புக்கு அடிபணிந்து, அடியேன் அவர் பேச்சை மீறி, ஓர் அடிகூட எடுத்து வைத்தது கிடையாது.

★ குப்புசாமி, கோவை

***இறைவன் எங்கே இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள்....?***

பக்திப் பசி உள்ளவர்களுக்கு, எங்கும் எப்போதும் கிடைக்கும் 'இரை'யவன்.

★ ஜே.துரைராஜ், சென்னை

***இசையமைப்பாளர் இளையராஜா, சங்கீதத்தில் கணக்கு இருக்கிறது என் கிறாரே....?***



'அம்மா என்றழைக்காத உயி ரில்லையே' பாடலின் த்வனி நல்ல பாதையை 'வகுக்கும்'; 'நின்னைச் சரணடைந்தேன்' ட்யூன் பக்தியைப் 'பெருக் கும்'; 'ஜனனி ஜனனி'யின் இசை ஆன்மிகத்தைக் 'கூட் டும்'; 'நிற்பதுவே நடப்ப துவே' ராகம் அறியாமை மாயையைக் 'கழிக்கும்'; நமது பௌதீகத்தில் ரஸாயன மாற்றம் ஏற் படுத்தும் அளவுக்கு 'கணக்கில்லாமல்' மெட்டமைத்தவர் அந்த 'இசை-விஞ் ஞானி'.



மதுராஜன்

**"கா**தல் நந்தவனம் ஆரம்பிச்ச நோக்கம் என்ன? காதலர்களையும், காதலையும் கௌரவப்படுத்தத்தானே? ஆனா ரெண்டு வாரமா ஜோக்கடிக்கறதா சொல்லி, காதலையே கிண்டல் செய்துட்டிருக்கே. இது சரியில்லை.''

இப்படி ஒரு 'டைசன்' குத்து போன வாரம் என் முகத்துல விழுந்தது. 'நாக்-அவுட்'டாகி விழுந்துட்டேன். கண் முழிச்ச பிறகு இதோ இந்த வாரக் காதல் நந்தவனத்தைக் கொடுத்திருக்கேன். சம்பந்தப்பட்ட அந்த 'டைசன்' ஆசாமி படிச்சுட்டு, அபிப்ராயம் சொல்வாருன்னு நம்பறேன்.

**ஆ**தாம் - ஏவாள் காலத்தில் ஆரம்பிச்ச இன்று வரைக்கும், இனியும் இருக்கப் போகும் விஷயம் காதல். சைகை மொழியில் தொடங்கிய காதல் பிறகு கவிதை, கதைன்னு எத்தனையோ வடிவங்களில் தன்னைப் பதிவு செய்துட்டிருக்கு. அறத்துப்பாலையும், பொருட்பாலையும் கொடுத்த வள்ளுவர் இன்பத்துப் பாலையும் கொடுத்திருக்கறது நமக்கெல்லாம் தெரிந்த விஷயம். நெகடிவ்வான வர்ணனையையும் இன்பமா எடுத்துக்கறது காதலில் மட்டும் தான்.

'பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு'

இதுக்கு அர்த்தம் என்னன்னா, 'எமன் அப்படிங்கற வார்த்தைக்கு அர்த்தம் தெரியாம இருந்தது. இப்ப தெரிஞ்சுப் போச்சு. அது போர் செய்யும் பெண்ணோட கண்கள்தான்'னு வள்ளுவர் சொல்றாரு.

நம்ம நண்பனையோ, சகோதரன் - சகோதரியையோ பார்த்து 'எமனே'ன்னு சொன்னா, கன்னத்துல 'பளார்'னு விடுவாங்க. ஆனா, காதலியையோ, காதலனையோ அப்படிக் கூப்பிட்டா ரசிப்பாங்க. இதுதான் காதலின் தனித்தன்மை!

*'நெஞ்சத்தார் காத லவராக*
*வெய்துண்டல்*
*அஞ்சுதும் வேபாக்கு அறிந்து'*

இப்படி அடிச்சு விடறார். மற்ற எல்லா விஷயங்களையும்விட கனவுக்கும் காதலுக்கும் நெருங்கின சொந்தம் இருக்கு. என்னுடைய கனவுக் காதலன் / கனவுக் கன்னின்னுதான் சொல்றோமே தவிர, கனவுத் தந்தை / கனவுத் தாய்னு சொல்றதில்லை. அந்த அளவுக்குக் காதலும் கனவும் சேர்ந்திருக்கு.

*'துஞ்சுங்கால் தோள்மேல ராகி*
*விழிக்குங்கால்*
*நெஞ்சத்தர் ஆவர் விரைந்து'*

கனவு எப்பவுமே இருக்காது.

# நெஞ்சில் இறங்கிய காதல்!

அதுக்காக எப்பவுமே 'எமனே, இராவணா, துரியோதனா, சூர்ப்பனகையே, சொர்ணா அக்காவே'ன்னு நெகடிவ்வாவே சொல்லிட்டிருக்கக் கூடாது. அஜீத்தே, சூர்யாவே, த்ரிஷாவேன்னும் சொல்லணும். வள்ளுவரும் அப்படித்தான் சொல்றாரு, பாருங்க.

*'நன்னீரை வாழி அனிச்சமே*
*நின்னினும்*
*மென்னீரள் யாம்வீழ் பவள்'*

மிக மெல்லிய மலர்னு சொல்லப்படுகிற அனிச்சமலரை விட மெல்லிய ளாம் காதலி. அதே மாதிரி லாஜிக்கைப் பத்திக் கவலையேபடாதது காதல். சூடான பொருளைச் சாப்பிட்டா நெஞ்சத்தில் இருக்கிற காதலனை வெப்பம் தாக்கும்னு, காதலி எதையும் சூடாவே சாப்பிடறதில்லையாம்.

கலைந்து போற கனவுக்காக வருந்தக் கூடாது. அதை பாசிடிவ்வா எடுத்துக்கணும். அதைத்தான் இந்தக் குறளில் சொல்லியிருக்கார். அதாவது, 'தூங்கும் போது கனவில் வந்து என் தோள்மேல் அமர்ந்துக்கற காதலன், நான் கண் விழிச்சதும் சட்டுன்னு இறங்கி நெஞ்சுக்குள்ளே போய்டறாருன்னு' காதலி சொல்றா.

'ஐயோ, கனவு கலைஞ்சு போச்சே; காதலன் போய்ட்டானே'ன்னு வருந்தாம 'அவன் எங்கேயும் போகலை, நெஞ்சுலதான் இறங்கி இருக்கான்'னு நினைச்சுக்கறது பாசிடிவ்வான அணுகுமுறை. அதுக்காக மீண்டும் மீண்டும் தூங்கிப் பார்த்துக் கனவுக் கன்னியைத் தேடாதீங்க; அப்புறம் நனவிலே அவள் வருகிறபோது தூங்கி வழிஞ்சுக்கிட்டே கிஸ்... ஸாரி, ஸாரி மிஸ் பண்ணிடப் போறீங்க! ●

# உண்மை!

எனக்கு முன்னால் சென்று கொண்டிருந்தவன் கைக்குட்டையைத் தன் 'பேண்ட்ஸ்' பாக்கெட்டிலிருந்து எடுத்த போது ஒரு கவர் கீழே விழுந்ததைக் கவனிக்காமல் மேலே போய்க் கொண்டிருந்தான். அவனைக் கூப்பிட்டுக் கொடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போதே எதிரில் இருந்த ஓர் ஒட்டலுக்குள் நுழைந்தேவிட்டான். என் மனதில் குறுகுறுப்பு. உறையைக் கிழித்து உள்ளே இருந்த கடிதத்தைப் படித்தேன். படித்தவுடன் உற்சாகமானேன்...

*நான் உன்னிடம் தொலைபேசியில் சொன்னபடி இவரிடம், நான் உன்னிடம் கொடுத்திருந்த இருபத்தைந்தாயிரத்தைக் கொடுத்தனுப்பு. ஆசாமி நம்பகமானவர். என்னிடம் சேர்ப்பித்து விடுவார். இவரை நீ பார்த்ததில்லை என்பதனால் இந்தக் கடிதத்தை இவரிடம் கொடுத்தனுப்பியிருக்கிறேன்...*

*இப்படிக்கு,*
*நண்பன் பார்த்திபன்*

திட்டமிட்டேன்... கவரில் எழுதியிருக்கும் விலாசத்துக்கு உடனடியாகப் போய் அந்த இருபத்தைந்தாயிரத்தை வாங்கிக் கொண்டு ஒரு மூணு அல்லது நான்கு மாதம் உல்லாசமாகக் காலத்தைக் கழிக்க வேண்டியதுதான். வேலையும் கிடைக்காமல், சாப்பாட்டுக்கும் வழியுமில்லாமல் நான் கஷ்டப்படுவது எனக்கல்லவா தெரியும்... எங்கிருந்தோ காற்றில் மிதந்து வந்த 'உல்லாச உலகம் உனக்கே சொந்தம்' என்ற பாட்டு என்னை மேலும் உற்சாகப்படுத்தியது. ஓர் ஆட்டோவை அமர்த்தி கவரில் கண்டிருந்த விலாசத்தில் போய் இறங்கினேன். வீட்டிலிருந்து வெளியே வந்த ஆளிடம் அந்தக் கடிதத்தைக் கொடுத்தேன்.

கடிதத்தைப் படித்தவன் உள்ளே கூட்டிக் கொண்டு போய் நாற்காலியை எடுத்துப் போட்டு உட்காரச் சொன்னான். ''பத்திரமாக ரூபாயை வைத்திருக்கிறேன். இதோ கொண்டு வந்து விடுகிறேன்...''

''சீக்கிரம் கொடுத்தனுப்பினால் நல்லது. ஏனென்றால் உங்கள் நண்பர் எனக்கு இன்னொரு வேலையையும் கொடுத்திருக்கிறார்...'' என்றேன். 'கடிதத்தைத் தொலைத்த ஆசாமி இங்கு வருவதற்குள்... அல்லது கடிதம் தொலைந்ததைப் பற்றித் தொலைபேசி மூலம் தெரிவிப்பதற்கு முன்னால் ரூபாயை வாங்கிக் கொண்டு கிளம்பிவிட வேண்டும்.'

''இதோ கொண்டு வருகிறேன். காஃபி போடச் சொல்கிறேன். குடித்துவிட்டு ரூபாயையும் வாங்கிக் கொண்டு கிளம்பி விடலாம்''-அவன் உள்ளே மறைந்தான்.

அங்கேயிருந்த ஒரு செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருந்தேன்... இன்றைக்கு நரி முகத்தில்தான் விழித்திருக்கிறோம் என்று மனதுக்குள் நினைத்தவாறே.

திடீரென்று என் தோளில் ஓர் அழுத்தமான கை. திரும்பிப் பார்த்தால் போலீஸ்காரர். எனக்குள் அதிர்ச்சி! எப்படி நான் போலி என்பது இவனுக்குத் தெரிந்தது.

போலீஸிடம் அவன் சொல்லிக் கொண்டிருந்தான்.

''என் நண்பன் தொலைபேசியில் 'நான் ஒருவனை அனுப்பி வைக்கிறேன். அவனிடம் நான் உன்னிடம் கொடுத்து வைத்திருக்



கும் ரூபாய் இருபத்தைந்தாயிரத்தைக் கொடுத்தனுப்பு. அவன் ஓர் ஊமை' என்று சொல்லியிருந்தான். ஆனால் இவனோ வந்தவுடன், 'சீக்கிரம் கொடுத் தனுப்பினால் நல்லது. ஏனென்றால் உங்கள் நண்பர் எனக்கு இன்னொரு வேலையையும் கொடுத்திருக்கிறார்' என்று கூறியதால் எனக்குச் சந்தேகம் வந்துவிட் டது. அதனால்தான் உங்களுக்கு 'ஃபோன்' செய்தேன்.''

சப்-இன்ஸ்பெக்டர் என்னை அறைந்த அறையில் உண்மையை ஒப்புக் கொண் டேன். ●

**முகவை ராஜா**

## ரீடர்ஸ் கார்னர்



# திருச்சிக்கு ஒண்ணு... சென்னைக்கு ஒண்ணா?

**க**டந்த வாரம் திருச்சிக்குச் சென்றிருந்தோம். அங்கெல்லாம் 'தமிழ்நாடு முழுவதும் பேச நிமிடத்துக்கு ஒரு ரூபாய்' என்று விளம்பரத்துடன் பொது தொலைபேசி நிலையங்கள் காணப்பட்டன.

இரவு சென்னையில் உள்ள எங்கள் உறவினரிடம், சமயபுரத்தில் உள்ள ஒரு தொலைபேசி நிலையத்திலிருந்து பேசினேன். இரண்டு நிமிடங்களுக்கு இரண்டு ரூபாய் பெற்றுக்கொண்டார். வியப்பாக இருந்தது. நான் பேசியது ஒரு ரூபாய் நாணயம் போட்டுப் பேசும் பெட்டித் தொலைபேசி இல்லை. சாதாரணத் தொலைபேசிதான். ஆனாலும் குறைந்த கட்டணம்.

சென்னைக்குத் திரும்பிய நான், திருச்சிக்குத் தொடர்புகொண்டு வந்து சேர்ந்த விவரத்தைத் தெரிவிக்க முயன்றபோது, தொலைபேசி நிலையத்தில் '95' போட்டுப் பேச வசதி இருப்பதாகக் கூறியதால் பேசினேன். பேசி முடித்ததும் ஒரு நிமிடத்துக்கு மூன்று ரூபாய் கேட்டனர். ''ஒரு ரூபாய் ஒரு நிமிடத்துக்குக் கட்டணம். இரண்டு ரூபாய் சர்வீஸ் சார்ஜ்'' என்றனர். ஏன் இந்த ஏமாற்று வேலை? திருச்சிக்கு ஒரு சட்டம், சென்னைக்கு ஒரு சட்டமா?

**- லலிதா செல்லப்பா, பம்மல்**

**மு**ன்னாள் பிரிட்டிஷ் பிரதமர் டோனி ப்ளேர், தன் பத



வியை ராஜினாமா செய்தவுடன் முற்பகல் அரசு மாளிகையைக் காலி செய்து விட்டு, புதிய இல்லத்துக்கு புறப்பட்டு விட்டார். அன்றே புதுப் பிரதமர் கோர்டன் பிரவுன் குடிபுகுந்தார்.

இங்கிலாந்து பரப்பளவில் சிறிதாக இருக்கலாம். ஆனால், விதி முறைகளை நேர்மையாகப் பின்பற்றுவதில் உலகுக்கே வழிகாட்டி. இந் நேரத்தில் நம் நாட்டை நினைக்கும் போது வேதனைதான் மிஞ்சுகிறது.

**- தி.வி.கிருஷ்ணமூர்த்தி, மும்பை**



**வி**டுமுறையில் அம்மா ஊருக்குச் சென்றிருந்தபோது, சித்தி வீட்டுக்குக் கிளம்பினோம். ''மதியம் இரண்டு மணிக்கு மேல் கிளம்பிச் செல்லுங்கள்'' என்றார் அப்பா. 'சித்தி தூங்கி ஓய்வெடுக்கும் நேரமாச்சே...' என்று தயங்கினேன்.

''காலை வேளையில் உன் சித்தி, சீரியல்களில் ஐக்கியமாகி இருப்பாள். மனம் விட்டுப் பேச முடியாது. சீரியலில் ஒரு காதும் உன்னிடம் ஒரு காதும் இருக்கும். சீரியலா, தூக்கமா என்னும்போது, தூக்கத்தை விட்டுக் கொடுக்கவே விரும்புவாள்'' என்றார் அப்பா. இது எப்படி இருக்கு!

**- என்.கோமதி, நெல்லை**

# அன்பு வழிவாகி நிற்பள்

**ச**மயபுரம் என்று சொல்லும்போதே கன்னத்தில் போட்டுக்கொள்ளும் பக்தர்கள் லட்சோப லட்சம் பேர் இருக்கிறார்கள். அங்கு உறையும் மாரியம்மனைப் பற்றி வழங்கும் புராணக் கதைகளையும் கோயிலைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும்விட, இந்த லட்சோப லட்சம் பக்தர்களின் வாழ்க்கையில் **அவள்** நடத்தியிருக்கும் திருவிளையாடல்கள் அதிசயமானவை, அபூர்வமானவை.

சமயபுரத்துக்குள் நுழையும்போதே இந்த உண்மை நமக்குப் புலனாகும். ஊரும், வீதிகளும் சர்வ சாதாரணமாகவே இருக்கும். பூஜை பொருட்கள் விற்கும் கடைகளைக் கொண்டுதான் ஒரு கோயிலுக்கு அருகே இருக்கிறோம் என்பதை உணர்வோம். கடைகளை நெருங்கி விட்டால், கைகளில் பிரார்த்தனை பிம்பங்களைச் சுமந்துகொண்டு அலையும் விற்பனையாளர்கள் நம்மை மொய்த்துத் தள்ளிவிடுவார்கள். அவர்களைச் சமாளித்து அனுப்பிவிட்டு உள்ளே போனால்... பிராகாரத்தைச் சுற்றிலும் விதவிதமான மக்கள் விதவிதமான பிரார்த்தனைகளைச் செலுத்திக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். மொட்டைத் தலையில் புதுச் சந்தனம் அப்பிக்கொண்டு திரியும் குழந்தைகள்; கைகளைத் தலைக்கு மேல் கூப்பியபடி தரையில் படுத்துப் பிராகாரத்தைச் சுற்றி உருண்டபடி அங்கப்பிரதக்ஷிணம் செய்யும் பெண்கள், அரிசி மாவும் வெல்லமும் பிசைந்த உருண்டைகளில் திரிபோட்டு நெய்யூற்றி வழிபடும் மூதாட்டிகள், தோளில் ஏந்திய கரும்புக் கட்டைகளில் தூளி கட்டி அதில் குழந்தையைக் கிடத்திக் காவடி போல் தூக்கிக்கொண்டு அம்மன் சன்னிதியை வலம் வரும் இளம் தம்பதி, திருநீறு குங்கும நெற்றிகளிடையே தென்படும் கிறிஸ்தவ கன்யஸ்த்ரீ கோலம்; ''ஏ சயிரா பானு! நில்லு'' என்று அழைக்கும் முகமதிய குரல்...

'நம்பினோர் கெடுவதில்லை நான்குமறை தீர்ப்பு;
அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக
வரம் பெறலாம்'

என்று முத்துமாரி குறித்து மகாகவி பாடியது நினைவுக்கு வருகிறது! நம்பிக்கை என்பது சடங்குகளின் எல்லைகளையும் மதங்களின் வரையறைகளையும் கடந்த மகோன்னத உணர்வு என்பதை சமயபுரம் மாரியம்மன் கோயிலின் மூலை முடுக்கெல்லாம் சொல்லிக் கொண்டேயிருக்கிறது; அதன் திருச்சுற்றில் தழைத்து நிற்கும் தல விருட்சமான



* மூலஸ்தான தங்க கோபுரம் (புதியது)




✱ உற்சவ அம்மன்

வேப்ப மரத்தில் கொத்துக் கொத்தாகத் தொங்கும் 'ரோஸ்' நிற பிரார்த்தனைச் சீட்டுகள் பறை சாற்றுகின்றன.

# வளம் தரும் கோயில்

## சீதா ரவி

அம்பிகை மாரியம்மனின் முகமும் நல்ல சிந்தூர நிறம். அவளுக்கென்றே விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட சிந்தூரத்தை கொல்கத்தாவிலிருந்து தருவிக்கிறார்களாம். மூலிகைக் காப்புடன் சேர்த்துச் சாத்துகிறார்களாம். ஒரு தடவை பார்த்துவிட்டால் ஜன்மத்துக்கும் கண்களில் குடியேறி மனத்தில் நிறைந்திருக்கக் கூடிய காந்தம் ததும்பும் முகம். எட்டுத் திருக்கரங்களுள் மேல் இரண்டில் பாசம்... டமருகம், அடுத்த இரண்டில் காமாக்ஷியைப் போல் தனுசும் (வில்) மலரம்பும்; அடுத்த கரங்களில் திரிசூலமும் மணியும், கீழ்த் திருக்கரங்களில் கத்தியும் கபாலமும். எப்போதும் தரிசனத்துக்குக் காத்திருக்கும் கூட்டத்தில் ஒருவராகச் சென்று பார்க்கையில் சில கணங்கள்தான் அவளைக் காண முடியும். அக் கணங்களில் இந்தத் திருக்கர அலங்காரங்களோ, அச்சுறுத்தும் ஆயுதங்களோ மனத்தில் தங்காது. அவற்றுக்குச் சற்றும் சம்பந்தமில்லாத அவளது மலர்ந்த கண்களின் கனிந்த பார்வையும், குமிழ்ப் புன்னகையும், பிரகாசமான தாடங்கங்களும் புகமொளி வீசும் கன்னங்களும், ஜொலிக்கும் வைரத் திருநீற்றுப்பட்டையும்தான் நம்மை நிறைக்கும். குங்குமப் பிரசாதம் இங்கு தருவதில்லை; திருநீறு மட்டும் தான். உத்ஸவ அம்பாளைப் பார்க்க பக்கவாட்டில் போய் நிற்கும் போதுதான் குங்குமம் கிடைக்கும்!

மூலவ, உத்ஸவ விக்ர



**மிடுக்கும் கம்பீரமும் நிறைந்த ராஜ தோற்றத்தினூடேயும் அவளுடைய முகத்தில் தாய்மையின் கனிவு பொலிவது தெரியும்**

ஹங்கள் தவிர, இங்கே அபிஷேக அம்பாள் தனியாக இருக்கிறாள். வெளித் திருச்சுற்றில் இவளுக்குத் தினமும் இரண்டு வேளை குளிரக் குளிர அபிஷேகம் செய்து, அந்தத் தீர்த்தத்தை எடுத்து வந்து பக்தர்களின் மீது தெளிக்கிறார்கள். அவள் திருமேனியைத் தீண்டி வந்த நீர், நோய்களை விரட்டவும் தீர்க்கவும் வல்லது என்கிறார்கள்.

குறிப்பாக, வெயில் காலத்தில் ஏற்படும் அம்மை நோய்கள் அண்டாமல் இருக்கவும் அவை வந்தால் விரைந்து பூரணமாகக் குணமடையவும் சமயபுரத்தாளிடம்தான் வேண்டிக் கொள்கிறார்கள். இதன் பின்னணியில் புராணக் கதை இருக்கிறது:

மார்க்கண்டேயனின் பக்திக்கு இரங்கி பரமேசுவரன் யமதர்மனை அழித்துவிட்டார். யமனின் தொழில் நின்றுபோனால் பூமியில் பாரம் வலுத்துவிடும் அல்லவா? அதைச் சமன் செய்து பிறப்பு - இறப்பு சுழற்சியைத் தொடர்வதற்கு முற்பட்டார் யமனுடைய மூத்த அமைச்சரான மாயாசூரியன். உயிர்களைக் காவு கொள்ளும் கொடிய நோய்களைப் பரப்பினார். மக்கள் துன்பம் தாளாமல் வாடினர். மும்மூர்த்திகளும் சக்திதேவியிடம் போய் முறையிட்டு, மாயாசூரியனின் கொடூரத்துக்கு ஒரு முடிவு கட்டும்படி வேண்டினர் . அவர்கள் கேட்டுக் கொண்டபடி மாயாசூரியனையும் அவன் சகோதரர்களையும் அழித்து, அவர்களுடைய தலைகளைக் கோத்து இடுப்பில் அணிந்து கொண்டாளாம் அம்பிகை. அந்த அம்பிகையின் அம்சமாகவே சமயபுரம் மாரியாத்தாள் காட்சி தருகிறாள். ஒரு காலை மடித்து, ஒரு காலைத் தொங்கவிட்டு ஒய்யாரமாக அமர்ந்திருப்பவளின் இடப் பாதத்தின் கீழ் அசுரனின் தலை இருப்பதைக் காணலாம்.

தக்ஷன் யாகம் செய்தபோது சிவபெருமானை அவமதிக்க, பார்வதி அந்த யாகத்துக்குச் சென்றதால் கோபமடைந்து அவளைச் சபித்துவிட்டார் சிவன். அப்போது சிதறிய அம்பாளுடைய உடலின் பல்வேறு பகுதிகள் தேசம் முழுவதும் விழுந்து சக்தி ஸ்தலங்களைத் தோற்றுவித்ததாகப் புராணம் இருக்கிறது.

இப்படிச் சிதறியபோது அம்பிகையின் கண்கள் விழுந்த இடம் கண்ணனூர் (இன்றைய சமயபுரம்) என்கிறார்கள். அதனால்தான் கண் சம்பந்தமான உபாதை அல்லது நோய் தீரவும் இங்கே வேண்டிக்கொண்டு, வெள்ளியில் கண் மலர் சமர்ப்பிக்கிறார்கள்.

கிருஷ்ணாவதாரத்தின்போது கம்ஸனின் கொலைவாளுக்குத் தப்பி வானில் கலந்த யசோதை - நந்தகோபனின் பெண் குழந்தையான மாயாவே இந்த மாரியம்மன் என்போரும் உண்டு. மாதவன் சோதரியான இவள் ஸ்ரீரங்கத்தில் இருந்தாள் என்றும் சொல்வோர் உண்டு. இவளது உக்ரம் அதிகமான ஒரு கட்டத்தில் ஜீயர் சுவாமிகள் இவளை இடம் மாற்ற ஏற்பாடு செய்தார். அப்போது அம்பாளைச் சுமந்து வந்தவர்கள் இவளை இறக்கி வைத்த இடம் கண்ணனூர்.

விஜயநகர மன்னர்கள் தென்னாட்டுக்குப் படையெடுத்து வந்தபோது கண்ணனூர் காட்டில் மாரியம்மன் இருப்பதைப் பார்த்துப் போரில் வெற்றி பெற அவளிடம் வேண்டியிருக்கிறார்கள். தாங்கள் வெற்றி பெற்று ராஜ்ஜியம் நிறுவியதும் மாரிக்குக் கோயில் கட்டியிருக்கிறார்கள்.

**வ**ண்ணமயமான புராண - வரலாறுகள் வலம் வரும் சமயபுரம் மாரியம்மனுக்குத் தினந்தோறும் கணக்கிலடங்காத காணிக்கைகள் வந்து குவிகின்றன. அப்படிக் குவியும் சேலைகளைக் கோயில் நிர்வாகம் ஏலம் விடுவதைப் பிராகாரத்தில் பார்க்கலாம். ஆவலோடு பக்தர்கள் அச் சேலைகளைக் 'கொத்தி'ச் செல்கிறார்கள். பக்தியோடு பைகளுக்குள் பத்திரப்படுத்திக் கொள்கிறார்கள்.

அடிக்கடி நடக்கும் தங்கத் தேரோட்டத்தையும் அதே பிராகாரத்தில் பார்க்க முடியும். நாதஸ்வரம் முழங்க, மின் விளக்கொளியில் தங்கக் கவசம் பிரகாசிக்க, உரிய இடங்களில் நின்று நின்று முன்னேறி வரும் மாரியம்மனின் உலா, அழகும் கம்பீரமும் நிறைந்த காட்சி.

மிடுக்கும் கம்பீரமும் நிறைந்த ராஜ தோற்றத்தினூடேயும் அவளுடைய முகத்தில் தாய்மையின் கனிவு பொலிவது தெரியும்.

'அன்பு வடிவாகி நிற்பள் துன்பெலாம்
அவள் இழைப்பள்
ஆக்கம் நீக்கம் யாமுவள் செய்கை -
இதை
ஆர்ந்துணர்ந்த வர்களுக்குண்டு உய்கை'

என்ற பாரதியின் வரிகள்தாம் மீண்டும் நினைவுக்கு வருகின்றன.

படங்கள்: **திருவரசு**

✱ தெப்போற்சவத்தின்போது கோயில் திருக்குளம்...



நாள் நெருங்க நெருங்க சித்ராவுக்கு 'பக்பக்'கென்று இருந்தது. எப்படித் தன்னால் மதுமிதாவை விட்டுவிட்டு இருக்க முடியும் என்று புலம்பித் தவித்தாள். தான் இல்லாமல் ஒரு நொடிகூட இதுவரை மதுமிதா இருந்ததில்லை என்பதை நினைத்தாலே அயர்ச்சியாக இருந்தது. முடியுமா? அவள் தனியாக இருப்பாளா? அவளால் இருக்க முடிந்தாலும் தன்னால் இருக்க முடியுமா? இதுதான் இப்போது சித்ராவின் மில்லியன் டாலர் கேள்வி.

சாஃப்ட்வேர் ஆசாமியான கணவன் மகேந்திரன் அலுவலகத்திலிருந்து வந்ததும் வராததுமாக ஆரம்பித்து விட்டாள்.

''என்னங்க, இன்னும் ரெண்டு நாள்தாங்க.''

''எதுக்கு சித்து?''

''என்ன புரியாம பேசறீங்க... நம்ம மதுவை ப்ரீகேஜி சேர்க்கப் போறோம் இல்ல... அவ ஸ்கூல் போக இன்னும் ரெண்டு நாள்தாங்க இருக்கு.''

''சரி, அதுக்கென்ன குட்டிம்மா இப்போ?''

''என்ன குட்டிம்மாவா? மது என்னைப் பிரிஞ்சு முழுசா மூணு நிமிஷம்கூட இதுவரை இருந்ததில்ல... எப்படிங்க இனிமே தினம் மூணு மணி நேரம் இருப்பா?''

''அவ இருப்பா... உன்னால வேணா இருக்க முடியாதுன்னு சொல்லு.''

''உண்மைதாங்க. சத்தியமா அவளப் பிரிஞ்சு என்னால இருக்க முடியாதுங்க.''

''என்ன மது மாதிரி பேசற? அவ படிக்க வேணாமா? அதுக்குச் சில தியாகங்கள நாம செஞ்சுத்தான் ஆகணும் சித்ரா.''

''நீங்க சொல்றது என் மூளைக்குப் புரியுதுங்க. ஆனா மனசுக்குப் புரியலயே...''

''நிதானமா யோசிச்சு ரெண்டுத்துக்கும் புரிய வை... ஆமா, மது எங்க.. மது?''

''என்னப்பா?'' என்று மழலை மாறாமல் பக்கத்து ரூமிலிருந்து விளையாட்டுப் பொருட்கள் புடை சூழ வந்தாள் மூன்று வயதுக் குழந்தை



# ஸ்கூலுக்குப் போன

# அம்மா!

மதுமிதா. அவளை வாரியணைத்த மகேந்திரன்,

''என்னம்மா, அம்மா ரொம்பத்தான் ஃபீலிங்ஸ் ஆஃப் இண்டியாவாறாங்க... உன்னைப் பிரிஞ்சு இருக்க மாட்டாங்களாம்... ஸ்கூலுக்கு அனுப்பப் பயப்படறாங்க'' என்றான்.

கலகலவென்று சிரித்த மது,

''மம்மி, நான் ஸ்கூல் போயி டாக்டர் ஆயி உனக்கு ஊசி போடுவேன். நீ அழாதே!'' என்று அவளிடம் தாவித் தேற்றினாள்.

சித்ரா, மழலையில் மனதைப் பறிகொடுத்து ''என் செல்லமே... மூணு மணி நேரம்டி... அம்மாவால அடக்க முடியலடி சோகத்த'' என்று மதுவைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

அந்த நாளும் வந்தது. மது ஸ்கூலுக்குப் போகும் தினம். அன்று அதிகாலையிலேயே சித்ரா எழுந்துவிட்டாள். மது தூங்குவதையே ரொம்ப நேரம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தவள், மகேந்திரனுக்குக் காஃபிபோட மறந்து வாங்கிக் கட்டிக் கொண்டாள். அன்றைக்கென்று பார்த்து மது ரொம்ப லேட்டாக எட்டு மணிக்குத்தான் எழுந்தாள். எழுப்ப வந்த கணவனையும் அதட்டி 'அவள டிஸ்டர்ப் பண்ணாதீங்க!' என்றுவிட்டாள். அவளாக எழ வேண்டுமாம். அப்போதுதான் பள்ளியில் தூங்கி விழ மாட்டாளாம். லாஜிக் பேசினாள். ஆனால் எட்டரைக்கு பெல்! முதல் நாளே தாமதமாய்ப் போனால் நன்றாகவா இருக்கும்! உறைத்ததும் பம்பரமாகச் சுழன்று மதுவைத் தயார்படுத்தினாள். குளிக்க வைத்து, பவுடர் பூசி, சாதம் ஊட்டும் வரை சங்கடமில்லாமல் இருந்த சித்ரா, யூனிஃபார்ம் அணிவித்ததும் சோகமாகிவிட்டாள். மறுபடி பிரிவுத் துயர் வந்து அவளை ஆட்கொண்டு விட்டது. நேரே புருஷனிடம் வந்து,

''ஏங்க, மது ஸ்கூல் போறத நினைச்சு வருத்தப்படறான்னு தோணுது. சோகமா ஆயிட்டா பாருங்களேன்... இன்னிக்குத்தான் அனுப்பணுமா என்ன? ஒன் வீக் கழிச்சு டிரெய்னிங் கொடுத்து அனுப்பலாமே...'' என்றாள்.

மகேந்திரன் எதுவும் பேசவில்லை. நேரே மதுவை நோக்கிச் சென்றான்.

''என்னம்மா, ஸ்கூல் போறத நினைச்சு ஃபீல் பண்றியா?'' என்றான்.

''ஆமாப்பா... நான் கிளம்பி இவ்ளோ நேரம் ஆச்சு... அம்மா இன்னும் கூட்டிட்டுப் போகல ஸ்கூலுக்கே... எனக்கு எவ்ளோ ஆசையா இருக்கு தெர்மா'' என்று முகத்தில் சந்தோஷத்தைக் காட்டினாள் மது.

சித்ரா முகத்தில் ஈயாடவில்லை.

''என்ன சித்ரா இது, நீ குழந்தையா, அவ குழந்தையான்னு எனக்குச் சந்தேகமா இருக்கு'' என்று கூறி, மதுவைக் கூட்டிக் கொண்டு புறப்பட ஆயத்தமானான் மகேந்திரன்.

''ஆமா, புள்ள மேல பாசம் இருக்கா உங்களுக்கு? காசு சம்பாரிச்சா போதுமா? அன்பு வேணும். கம்ப்யூட்டர் கூட பழகிப் பழகி நீங்களும் கம்ப்யூட்டராயிட்டீங்க''

• மு.மாறன்

என்று அவனையே வைதவளிடம்,

''இப்ப என்னதான் செய்யணும்ங்கற?'' என்றான்.

''நீங்க ஒண்ணும் செய்ய வேணாம் சாமி. என் புள்ளைய ஸ்கூல்ல விட எனக்குத் தெரியும்'' என்று வெடுக்கென்று மதுவைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டாள் சித்ரா. வீட்டிலிருந்து பத்து நிமிட தூரம்தான் ஸ்கூல். சித்ரா போய்ச் சேரவும் பெல் அடிக்கவும் சரியாக இருந்தது. குழந்தையைத் தூக்கிக்கொண்டு வகுப்பறைக்குச் செல்ல முயன்றவளை ஸ்கூல் கேட்டிலேயே மடக்கி விட்டான் வாட்ச்மேன்.

''யாரும்மா அது, குழந்தையை இறக்கி விட்டுட்டு நீ போம்மா. நாங்க பாத்துக்கேறாம். இதுக்கு மேல பேரண்ட்ஸ் யாரும் உள்ள வரக்கூடாது.''

சித்ராவுக்கு என்னமோ மாதிரி ஆகி விட்டது. தன்னையும் குழந்தையையும் பிரிக்க வந்து கிராதகனாக அவன் அவளுக்குத் தெரிந்தான்.

''ஏங்க, பச்சக் குழந்தங்க... இங்கனயே விட்டா எப்படி அது கிளாஸுக்குப் போகும்... தள்ளுங்க, நான் போய் விட்டுட்டுப் போறேன்.''

''முடியாதும்மா... ஹெச்.எம். திட்டுவாங்க.''

''கூப்பிடுயா ஹெச்.எம்.மை; நான் பேசறேன்... குழந்தையான்னா கேட்க மாட்ற?''

அதற்குள் இரண்டொரு ஆட்கள் அங்கே கூடி விட்டார்கள். ஒரு டீச்சர் பொறுமையாக எடுத்துச் சொன்னாள்.

''மேடம், இது ரூல். மாத்த முடியாது. இன்ஃபாக்ட் உங்களைவிட நாங்க குழந்தைகள நல்லாவே பாத்துப்போம்.''

''முடியாதுங்க. எம் புள்ள க்ளாஸ்ல உட்கார்றத நான் கண்ணால பார்த்துட்டுப் போயிடறேன்.''

என்ன செய்வதென்று புரியாது ஆள் ஆளுக்கு விழிக்க, விஷயம் ஹெச்.எம். மிடம் சென்றது. சித்ரா வரவழைக்கப்பட்டாள். குழந்தையிடம் பேச்சுக் கொடுத்தார் ஹெச்.எம்.

''குட்டிப் பாப்பா பேரென்ன?''

''எம்.சி.மதுமிதா.''

''அப்பா பேரென்ன?''

''மகேந்திரன்.''

''அம்மாவ அனுப்பிடலாமா? நீ போய் க்ளாஸ்ல உட்கார்றியா?''

மதுமிதா 'ஓ'வென்று தலையாட்டினாள்.

''அப்புறம் என்னம்மா? குழந்தையே சொல்லுதே... நீங்க புறப்படலாம்ல.''

''அவ சும்மா தலையாட்டுவாங்க... அப்புறம் 'அம்மா'ன்னு அழ ஆரம்பிச்சுடுவா.''

''இப்படிச் சொன்னா எப்படிம்மா?''

''க்ளாஸ் ரூம்ல அவ உட்கார்ந்ததும் போயிடறேன்.''

''சரி, ஸ்ட்ரெய்ட்டா போய் லெஃப்ட். ப்ரீகேஜி கிளாஸ் ரூம். விட்டுட்டுக் கிளம்புங்க.''

''ரொம்ப தேங்க்ஸ் சார்.''

ப்ரீகேஜி மிஸ் சித்ராவை வரவேற்றாள்.

''நாங்க பாத்துக்கறோம்; நீங்க புறப்படுங்க.''

''சில விஷயம் சொல்லணும்.''



''மன்னா! யாராலும் நெருங்க முடியாத எதிரி நாட்டு மன்னரின் கோட்டையை எப்படி உடைத்தீர்கள்?''

''வாஸ்துபடி அரண்மனை வாசல் திறந்தே இருக்க வேண்டும் என்று புரளி கிளப்பினேன்!''

- சென்னிமலை
சி.பி. செந்தில்குமார்



**"முடியாதுங்க. எம் புள்ள க்ளாஸ்ல உட்கார்றத நான் கண்ணால பார்த்துட்டுப் போயிடறேன்!"**

"என்ன?"

"ஒம்போது மணிக்கு அவ சூச்சு போவா."

"சூச்சுன்னா?"

"அதாங்க ஒன் பாத்ரூம்... ஒன்ப தரைக்கு எதுனா ஸ்நாக்ஸ் சாப்பிடுவா... இந்தாங்க, இந்த பிஸ்கெட்டைக் கொடுத் துடுங்க... பத்துக்கு லேசா கண் சொருகும்."

"உங்களுக்கா?"

"ம்கூம்... எம் பொண்ணுக்கு. லைட்டா ஜம்ப் பண்ணச் சொல்லுங்க."

"பத்தரைக்கு போகோ சேனல் பார்ப் பாளா?"

"ஆமாங்க... அட, என் பொண்ணைப் பத்தி உங்களுக்குக்கூட தெரிஞ்சிருக்கே... ஆனா, இங்க என்ன டீ.வி.யா இருக்கு. அதனால பதினொரு மணிக்கு இந்தாங்க, இந்த இட்லிய ஊட்டி விடுங்க."

டீச்சரின் கையில் சுமை ஏறிக் கொண்டே போனது.

"பதினொன்றரைக்கு எதுவுமில்லீங்க மிஸ். ஆனா பன்னெண்டுக்கு வீட்டுக்கு அனுப்பிச்சிடுங்க."

"ஏங்க, இன்னைக்கு ப்ரீகேஜில இருபது குழந்தைங்க சேர்ந்திருக்குது. எந்த பேரண்ட்ஸூம் உங்கள மாதிரி இல்ல."

"இருக்க முடியாது. சித்ரா எப்பவும் சிங்கிள்தான்."

"என்ன சொல்ல வர்றீங்க?"

"புரியலயா... விடுங்க. சிவாஜி டய லாக்கு."

"சரி சரி புறப்படுங்க, மேடம்."

அங்கிருந்து நகர்ந்தாலும் சித்ராவுக்கு ஸ்கூலை விட்டு, மதுவை விட்டு நகர மனசில்லை. கிளாஸூக்கு வெளியே இருந்த பெஞ்சில் உட்கார்ந்திருந்த ஆயம் மாவிடம் பேச்சுக் கொடுத்தாள். ஐந்து நிமிடங்கள் பேசியிருப்பாள்... ப்ரீகேஜியி லிருந்து ஏதோ குழந்தை அழும் சத்தம்... ஓடோடினாள். 'மது குரல் மாதிரியே இருக்கே!'

நேரே மிஸ்ஸிடம் பதற்றத்துடன் சென்றவள்,

"என்னங்க, என்ன ஆச்சு என் குழந்தைக்கு?"

"ஏம்மா, அழுதாலே அது உங்க குழந் தைதானா? அங்க பாருங்க, உங்க பொண்ணு எவ்ளோ சந்தோஷமா விளை யாடிட்டிருக்கா."

பார்த்தாள். மது, சக பிள்ளைகளுடன் குதூகலமாகக் குலாவிக் கொண்டிருந்தாள். நிம்மதியாக இருந்தது. அதற்குள் ஆயம் மாவும் கிளாஸூக்கு வந்து மிஸ்ஸிடம் புகார் சொல்ல ஆரம்பித்தாள்.

"இந்தம்மா போகாம அங்கனயே நின்னு பேசிட்டிருக்காங்க, மிஸ்."

அவளிடம் மிஸ் ஏதோ சொல்ல, விலகி னாள்.

சற்றைக்கெல்லாம் ஆயாவுடன் ஹெச்.எம். வந்துவிட்டார். நேரே மது மிதாவிடம் சென்றவர், குனிந்து ஏதோ பேசினார். என்ன நடக்கிறதென்றே சித்ரா வுக்குப் புரியவில்லை. ஹெச்.எம்., டீச்சர், ஆயா, குழந்தைகள் எல்லோரும் வேடிக்கை பார்க்க, மதுமிதா நேரே சித்ரா விடம் வந்து,

"அம்மா, ப்ளீஸ் நீங்க கிளம்புங்க... நான் பத்ரமா இருப்பேன்" என்றாள்.

'ஓஹோ! நான் புறப்பட மறுக்கிறேன் என்று என் பிள்ளையை வைத்தே சொல்ல வைக்கிறார்களோ!' சித்ராவுக்குக் 'குபுக்' கென்று ஒரு சொட்டுக் கண்ணீர் எட்டிப் பார்த்தது. மதுமிதா அவள் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு ஸ்கூல் வாசலுக்கே வந்து விட்டாள்.

"வீட்டுக்குப் போயிட்டு அப்புறமா வாங்கம்மா. குழந்த மாதிரி பண் ணாதீங்க..."

சித்ரா அவளைத் தூக்கி வாரி அணைத்து முத்தமிட்டு இறக்கிவிட்டு, திரும்பிக்கூட பார்க்காமல் விறுவிறு வென்று வீடு நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.



# தராசு












● ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

? உண்மை, பொய் - இரண்டையும் ஏலம் விட்டால் எது அதிக விலைக்குப் போகும்?

!பொய்தான்! உண்மை எப்போதுமே விலை போகாது.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? தி.மு.க.வின் ஒட்டுமொத்த குரலில் எனது குரலும் ஒன்றாக இருக்கும் என்கிறாரே கனிமொழி?

! அதை வடிகட்டி எடுக்க தலைமைக்குத் தெரியாதா? 'ஒரு பெண் ஏன் ஜனாதிபதியாகக் கூடாது?' என்று கனிமொழி கேட்கப்போக, பிரதிபா பெயரை காங்கிரஸ் சொன்னதும் கண்ணை மூடிக்கிட்டு ஏத்துக்கிட்டார் பாருங்க!

● சோமதேவராசன், நாச்சியார்கோயில்

? கின்னஸில் இடம்பெறுவதற்காக மணப்பாறை டாக்டர் முருகேசன், தமது 15 வயது மகன் திலீபன்ராஜை சிசேரியன் ஆபரேஷன் செய்யும்படி சொன்னது சாதனையா? முட்டாள்தனமா?

! முட்டாள்தனத்தில் ஒரு சாதனை! மூர்க்கத்தனமான செய்வினை, வக்ரமான சிந்தனை.

● டி.எம்.சிவரஞ்சனி, திருவைகாவூர்

? தமிழகத்தில் மின்வெட்டு இல்லை என்கிறாரே ஆற்காடு வீராசாமி?

! ஜெனரேட்டர் உள்ள தொழிலகங்களில் கோடை காலத்தில் வாங்கும் டீசல் அளவு எகிறுகிறது; போதாதகுறைக்கு, ஜெனரேட்டர் பயன்படுத்தி 'மின் உற்பத்தி' செய்வதற்காக இந்த அலுவலகங்கள் வரி வேறு அழுதாக வேண்டும். மின்வெட்டு, அமைச்சர் வீட்டில் வேண்டுமானால் இல்லாமலிருக்கலாம்.

● கே.ஆர். ராமச்சந்திரன், சென்னை - 24 ★

? தமிழ் சினிமா - சிவாஜிக்கு முன்; சிவாஜிக்கு பின் - கமெண்ட்ஸ் ப்ளீஸ்?

! சி.மு: பிரும்மாண்டம் பற்றிய கவலை, சி.பி: பிரும்மாண்டத்தைவிடப் பெரிதாகச் சாதிப்பது பற்றிய கவலை.

● மா.உலகநாதன், திருநீலக்குடி

? தேர்தலின்போது மதுரையில் வன்முறை எதுவும் நடக்கவேயில்லை

# தமிழ் சினிமா-சிவாஜிக்கு







* கவலைக்குப் பின் கவலை!



* வடிகட்டிய ஒலி!






* வெயில்கால வேதனை!

என்கிறாரே கலைஞர்?

! அதற்காக தேர்தல் ஆணையத்துக்கு நன்றி சொல்வதற்குப் பதில் குறை கூறுவது தான் அபத்தமாக இருக்கிறது! தி.மு.க. கூட்டணி பெற்ற பெரிய வெற்றி குறித்து யாரும் எவ்விதக் குறையும் கூற முடியாத படி தேர்தலை நடத்திக் கொடுத்தது, தேர்தல் ஆணையம் அல்லவா!

- வே.ந.கதிர்வேல், வேலூர்

..? வன்முறையில் நாங்கள் ஈடுபட வேண்டிய அவசியமில்லை; அது எங்க ளுக்குத் தெரியாததும்கூட என்று மு.க. அழகிரி பேட்டி கொடுத்துள்ளாரே?

! தினகரன் தாக்குதல் வழக்குக்கு இதையே சி.பி.ஐ. சாட்சியமாக எடுத்துக் கொள்ளாமலிருந்தால் சரிதான்!

- ரேவதிப்ரியன், ஈரோடு

? எப்படியும் தோற்போம் என்று தெரிந்தும் ஜனாதிபதி தேர்தலுக்கு நாற்பதுக் கும் மேற்பட்ட சுயேச்சைகள் மனுத் தாக்கல் செய்துள்ளனரே?

! தோற்பது கிடக்கட்டும்; வேட்பு மனுக்கள் ஏற்கப்படவே இல்லையே!

- லலிதா செல்லப்பா, பம்மல்

? குடியரசுத் தலைவர் தேர்தலில் வேட் பாளராக பிரதிபா பாட்டீலை நிறுத்தி வைத்த முறையே ஒரு ஜோக் என்றால், அவரை ஆதரித்து தமிழகத்தில் மகளிர் பேரணி நடத்துவது அதைவிட பெரிய ஜோக் என்று சொல்லலாமா?

! அதைவிடவும் மிகப்பெரிய ஜோக், பிரதிபா மீது கூறப்படும் குற்றச்சாட்டுகள் எல்லாம் புனைந்துரைகள் என்று சாதிப்பது.

- பி.ஜானகி, பாளையங்கோட்டை

? மௌனம் கலக நாஸ்தி என்கிறார் களே...? அது எல்லா இடத்திலும் செல்லுமா?

! சத்தியத்தைப் பேச வேண்டிய இடத்தில் / நேரத்தில் பேசாமலிருப்பது தவறு, அசத்தியத்தைப் பேசாமல் மௌனம் காப்பது நன்று.

- அகிலா அன்புமணி, ஈரோடு ❑

? நீங்கள் உடனே பாராட்ட விரும்பும் நபர் யார்?

! பதினைந்து வயதில், எஸ்.எஸ்.

# முன்... சிவாஜிக்குப் பின்...

**24.6.2007 இதழில் இடம்பெற்ற வாசக தராசு போட்டியில் பரிசு பெறும் வாசகர் : ப.மூர்த்தி, பெங்களூரு. அதிக வாக்குகள் பெற்ற கேள்வி எண்:13**

எல்.ஸி. முடிக்கும் முன், ஒரு காய்கறி வியாபாரி (தள்ளுவண்டி)யை மணந்து, வெறியோடு படித்து, கம்ப்யூட்டர் இன்ஜினீயரிங் முடித்து, இன்று இன்ஃபோஸிஸ் பணியாளராகப் பயிற்சி பெற்று வரும் ஃபாத்திமா பீபி ஷேக்; அதைவிட அவருக்குத் துணை நின்று, கடன் வாங்கிப் படிக்க உதவிய படிப்பறிவில்லாத கணவன் சிலார்!

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

*? தமிழகத்தில் தற்போது போலீஸ் துறையில் முழுச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய நிலை என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?*

! ராமதாஸ், தமிழக அரசின் செயல்பாட்டினை சீர்திருத்த முயற்சி செய்கிறார். கலைஞரோ, ராமதாஸின் கண்டனக் குரலைச் சீர்திருத்த முயற்சி செய்கிறார். இந்தப் போட்டிக்கிடையில் போலீஸை சீர்திருத்துவதாவது! அரசியல்வாதியின் கிடுக்கிப் பிடியில் சிக்கியுள்ள நமது போலீஸ் எவ்வாறு சீர்திருந்தும்?



✱ ஆதர்ச தம்பதி!

● அ.யாழினி பர்வதம், சென்னை - 78

*? மக்களுக்கு ரூ.500 கவர் கொடுப்பது தவறென்றால், தாஜ் கோரமாண்டல் நட்சத்திர ஹோட்டலில் விருந்து வைத்து, எம்.பி. / எம்.எல்.ஏ.க்களிடம் பிரதிபா பாட்டீலுக்கு வாக்குக் கேட்பது மட்டும் சரியா?*

! இரண்டுமே தவறுதான். பணத்துக்கும் விருந்துக்கும் அடிமைப்பட்டவர்கள் மனசாட்சிப்படி எவ்வாறு வாக்களிக்க முடியும்? போட்டி தீவிரமானால் பேரணி, விருந்துடன் நில்லாது, அடுத்த கட்டத்துக்குப் போகும்!

● வசீகரன், சென்னை - 18

*? 'இந்தியாவில் தனிமனிதச் சுதந்திரம் எங்கே இருக்கிறது?' என்று குஷ்பு கேட்கிறாரே?*

! தனிமனிதச் சுதந்திரம் இல்லையெனில் இந்தக் கேள்வியை அவர் எப்படிக் கேட்டிருக்க முடியும்? பொறுப்புணர்வுடன் சுதந்திரம் பயன்படுத்தப்படாத போது, அதைத் தட்டிக் கேட்கும் சுதந்திரம் மற்றவர்களுக்கு உண்டு என்பதையும் அவர் மறவாமல் இருக்க வேண்டும்.

● வெ.கல்யாணி, திருநெல்வேலி

*? தம்மை வரவேற்கும் விளம்பரங்களிலாவது 'சங்க தமிழ்', 'தமிழ் கடல்' என்றெல்லாம் பிழையோடு எழுதாமல் செம்மையாகத் தமிழைப் பயன்படுத்த கழகக் கண்மணிகளுக்குக் கற்றுத் தருவாரா கலைஞர்?*

! ஒற்றுப் பிழைகள் மட்டுமா? 'ஒலி விளக்கே', 'பொற்கிளியே' (பொற்கிழி) என்றெல்லாம் இதுவரை நாம் சந்திக்காத எத்தனையோ பிழைகளைக் கையாண்டு செம்மொழி வளர்க்கும் உடன் பிறப்புகளின் உணர்வில் இப்போது மயங்கியிருக்கிறார். சற்றுப் பொறுங்கள்; கற்றும் தருவார்! ●

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:

அகிலா அன்புமணி,
ஈரோடு

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:

கே.ஆர்.ராமச்சந்திரன்,
சென்னை -24



# சினிமாவில் தொற்றுநோய்!

ஜிகினா இரண்டு, ஒன்றோடு ஒன்று சண்டை போட்டுக் கொண்டிருப்பதைப் போலிருக்கும் ஒரு வண்ணத்துப்பூச்சியைப் பார்க்கும்போது!

விசா - விசாரணை, பாஸ்போர்ட் - பயணச்சீட்டு இல்லாமல், தேகமெங்கும் பளபளப்பாய் படபடப்பாய் பறக்கும் இந்த கலர்ஃபுல் குட்டி விமானத்தின் வளர்ச்சிப் பருவத்தைக் கவனித்தால், அது ஒரு கூட்டுப் புழுவாய் நெளிந்ததும், ஊர்க்காலில் மிதிபடாமல் ஊர்ந்ததும்... இப்படி சர்வ சங்கடங்களும் தெரியும்.

இன்று, சின்னத்திரையில் ஒரு வண்ணத்துப்பூச்சியாய் சிறகடிக்கிறது ஒரு ட்ரைலர் - 'அம்முவாகிய நான்!' நானும் நடித்த திரைப்படம், இம்மாத இறுதியில் ரிலீஸ்!

இப்படத்துக்கு இப்போது ஏகப்பட்ட வரவேற்பு இருப்பதாக, அகப்பட்ட செய்திகள் கூறுகின்றன.

ஜிகினாவாக மின்னி, மினுமினுப்பதற்கு முன் இப்படத்தின் இயக்குனர் பத்மாமகன் ஒரு கூட்டுப்புழுவாய்... கூட்டாக இல்லாமல் தனியாளாக எவ்வளவு போராடியிருக்கிறார் என்பது, அவரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

பத்மாமகன் - பெயரே மிக சென்டிமென்டலாக இருந்தது. நான்கூட பத்மா மகன்தான்! அம்மா பெயர் பத்மா + வதி. எத்தனையோ பேரின் தாயின் பெயர் பத்மாவாக இருக்கலாம். எனக்குத் தெரிந்து இவர் மட்டும்தான் பத்மாமகன் என்று பெயர் வைத்திருக்கிறார்.

கதை சொல்ல வந்தவர், 'பல்லவன்' என்றும், தான் ஏற்கெனவே டைரக்ட் செய்த ஓடாத படத்தின் - ஓடாத கதையை ஒன்றரை மணி நேரம் ஒரு கவிதையாக என்னிடம் ஓட்டினார். ''அதை விடுங்க சார்... தோல்விங்கறது சகஜம் (அ) 80% சக்ஸஸ்! அதை வச்சி உங்களை மதிப்

**ரா.பார்த்திபன்**

ஜிகினா-14

பிட முடியாது!'' என்றேன் நான். ஏனெனில், நானே ஒரு கலைஞன்! நானே ஒரு வியாபாரியாக இருந்திருந்தால்... அந்தத் தோல் விப்பட டைரக்டருக்கு டீ மட்டும் கொடுத்துவிட்டு, கதையே கேட்காமல் டிமிக்கி கொடுத்திருப்பேன்.

இன்றுள்ள, இங்குள்ள வெற்றியிலுள்ள பல நடிகர்கள், திறமையான இயக்குனர்களைவிட, வெற்றி அணிந்துள்ள இயக்குனர்களுடனேயே இணைகிறார்கள். மார்க்கெட்டும், மார்க்கெட்டும் இணைந்தால் மார்தட்டும் வியாபாரம் செய்யலாமே!

இப்படி அனேக படங்கள் Selling the names ஆகத்தான் (They are not selling the product) வெளியாகின்றன. அப்படிப்பட்ட படங்களுக்கு ஆரம்ப ஆதரவு, படாடோபமாக இருக்கும். Product சரியில்லையென்றால், பொதுமக்கள் கைவிட்டு விடுவார்கள்.

'மொழி', 'பருத்திவீரன்', 'சென்னை-28' போன்ற படங்களின் சரக்குதான் சந்தையில் விலைபோனது. ஆனால், சினிமாவில் தொன்றுதொட்டு இருக்கும் ஒரு தொற்று நோய், வணிக ரீதியாகவும் வெற்றிபெறப் போகும் ஒரு நல்ல கதையம்சமுள்ள படத்தை, பெயர்போன வியாபாரிகள்கூட, முன்கூட்டியே கணிப்பதில்லை.

தயாரிப்பாளராய் இருந்து சமீபத்தில் என் நண்பராய் மாறிய ஒருவரிடம் உரிமையோடு கூறினேன். 'சென்னை - 28 படத்தை வெளியிடறதுக்கு அவங்க எவ்ளோ கஷ்டப்பட்டிருப்பாங்க? உங்களை மாதிரி தயாரிப்பாளர்கள், அந்த மாதிரி படத்தைப் போட்டுக் காட்டச் சொல்லி (29 தடவை கூட) புடிச்சிருந்தா வாங்கலாம் இல்லை.'

'அழகி' படத்தை எடுத்து வைத்துக் கொண்டு, எடுத்தவரும் படைத்தவரும் பட்டபாடு ஒரு சோக காவியம். எத்தனையோ முறை படத்தைப் போட்டுக்காட்டியும் வியாபாரிக்க யாரும் முன் வரவில்லை. ஒரு மழை நாளில், திரு. தங்கர் பச்சான், நான் 'இவன்' படப்பிடிப்பு நடத்திக் கொண்டிருந்த நடிகர் சங்கத்துக்கு வந்து, 'இரண்டரைக் கோடி செலவு செய்த தயாரிப்பாளர், ஒரு கோடி நஷ்டப்படத் தயாராக இருக்கிறார். ஒன்றரைக்கு வாங்கிக்கொள்ள யாராவது தயாராக இருப்பார்களா?' என்று கேட்டது, இன்னமும் என் நெஞ்சில் ஈரமாய். பிறகு, அந்தத் தயாரிப்பாளரே ஒரு 40 L (lakhs) செலவு செய்து பிரிண்ட் போட்டு, படத்தை வெளியிட்டு, ஒன்றரை C (Crore) லாபம் Score செய்து வெற்றி கண்டது வேறு கதை!



'அழகி' கதை கேட்டபோது... சொல்ல ஆரம்பித்த பத்தாவது நிமிடத்திலேயே அந்தப் படத்தை பாதி சம்பளத்தில் நடிக்க ஒப்புக்கொண்டேன். அதே போன்ற ஓர் உணர்வு திரு. பத்மாமகன் கதை சொன்ன போது எனக்கு ஏற்பட்டது.

இந்த முறை, அந்தக் கதையை நானே தயாரிக்க விரும்பினேன். எனக்குத் தெரிந்து தொடர்ந்து படம் எடுத்தும் நஷ்டப்படாத ஒரே ஜீவன் நல்ல பாம்புதான்! நான் நல்ல படம் எடுத்து ஏற்கெனவே நஷ்டப்பட்டிருந்ததால், 'சிவாஜி'யை இயக்கியவரிடம் பத்மாமகனை கதை சொல்லச் சொன்னேன். ஷங்கருக்கும் கதை பிடித்திருந்தும் ஏதோ காரணத்தால் அது தள்ளிப் போடப்பட்டது. பிறகு பத்மாமகனே முயற்சி செய்து படம் துவங்கப்பட்டது. முதல்கட்ட படப்பிடிப்பு, கல்லில் இருந்து சிலையைச் செதுக்குவது போல மிக நேர்த்தியாகத் துவங்கியது. உளியாக உழைத்தவர் கேமராமேன் எம்.எஸ்.பிரபு.



* 'அம்முவாகிய நான்' படப்பிடிப்பில்...

ஒளியை மட்டுமல்லாமல் உணர்ச்சிகளையும் பதிவு செய்யத் தெரிந்த விஷயக்காரர் அவர். ஒரு கட்டத்தில் படம் நின்று, படுத்து, எழுந்து, நடந்து என, பல்வேறு பிரச்னைச் சக்கரங்களுக்குள் (பல் சக்கரத்துக்குள் சிக்கினாலே தலை தப்பாது) சிக்கி உருக்குலைந்து போனார் பத்மாமகன். இந்தக் கட்டத்திலிருந்து இந்தப் படத்தின் Hero மாறுகிறார். அவர் பெயர் ரூபஸ் பார்க்கர். அவர் பெயரை உச்சரிப்பது சிரமமாக இருந்தால் சிக்கனமாக அவரை Friend என்று அழைக்கலாம். மூழ்காத Ship-பே Friendship தான். கை கொடுத்து கரை சேர்க்கக்கூடிய ஒருவராய் இந்த friend இருந்தார்.

ஏற்கெனவே ஒன்றரை C பல்லவன் படத்தால் நஷ்டப்பட்ட அந்த நண்பர், பத்மாமகன் பெயரைக் கேட்டாலே பாஸ்போர்ட்டைக் கடலில் கிழித்துப்போட்டுவிட்டு சென்னைப் பக்கமே வந்திருக்கக் கூடாது, நியாயமாய். ஆனால் இந்த friend நண்பனுக்காகவும், நண்பனிடமிருந்த திறமைக்காகவும் இன்னும் கொஞ்சம் Lகன் கொடுத்து, 'அ - ஆகிய நான்' தொடரக் காரணமாக இருந்தார். இந்தப் படத்தின் தயாரிப்பாளர் திரு.சேகர் அவர்களையும் பாராட்டாமல் இருக்க முடியாது. ஆனால், ஏற்கெனவே நஷ்டப்பட்ட ஒரு நண்பன் மீண்டு வர, மீண்டும் முன் வருவது ஆச்சரியக்குறிக்குரியது.

அதிர்ச்சி தரக்கூடிய ஒரு தகவல், சினிமாவின் மைல் கற்களாக கருதப்படும் சில படங்களைத் தயாரித்தது, தயாரிக்க உதவியது அனேகமாக ஏற்கெனவே சினிமா மூலம் பெயரையும், பணத்தையும் சம்பாதித்த தயாரிப்பாளர்களாய் இருக்க மாட்டார்கள். தேங்காய் வியாபாரமோ, மாங்காய் வியாபாரமோ செய்து சம்பாதித்த லாபத்தை, ஒரு மஞ்சள் பையில் வைத்து மடித்து எடுத்துக்கொண்டு, சினிமா மீதுள்ள ஆர்வத்தாலோ அல்லது சினிமாவில் தத்தளிக்கும் தன் நண்பனுக்காகவோ உதவ வந்தவர்களாக இருப்பார்கள். அந்த உதாரண புருஷப் படங்கள் 16 வயதினிலே, சுவரில்லாத சித்திரங்கள், ஒரு தலை ராகம், அழகி... இப்படி இன்னும் நிறைய.

எதற்காக இவ்வளவு நீண்ட விளக்கம் என்றால், காதல் கர்ப்பமாக்கும். ஆனால், நட்பு மட்டும் நிறைய 'வெற்றி'க்குக் காரணமாகும். நட்புக்காக உயிரைக் கொடுப்பதாக உயில் எழுதிக் கொடுக்க ஓராயிரம் நண்பர்கள் தயாராய் இருப்பார்கள். ஆனால் அதை, ரூபா - அணா - பைசாவாக மாற்றிக் கொடுக்க நண்பர்கள் கிடைப்பதென்பது குஞ்சு பொரிக்கக்கூடிய ஒரு டைனோசர் முட்டை கிடைப்பதுபோல! அதேபோல ஒரு திறமையானவன் தற்கொலை செய்து கொள்ள, அத்தனை வாய்ப்பு வசதிகளும் கூடி, குழுமி, கும்மி அடித்தாலும் அதை மீறி வெற்றி பெறுவது, அந்த டைனோசர் குஞ்சு வளர்ந்து, அது முட்டை இடுவதைப் போல!

நிறைய போராட்டங்களைச் சந்தித்ததால் மட்டுமே ஒரு படம் சிறந்த படமாகிவிடாது. 'அம்முவாகிய நான்' எவ்வளவு சிறந்த படம் என்று ரசிகர்களாகிய நீங்களே பார்த்துச் சொல்லுங்கள்.

'அம்முவாகிய நான்' என்பது நானல்ல, அது பத்மாமகன். வழக்கமாக எல்லா விளம்பரங்கள் சொல்வதைப் போலவே நாங்களும் சொல்கிறோம் 'பார்த்துப் பழக்கப்பட்ட வழக்கமான சினிமாவாக இருக்காது 'அம்முவாகிய நான்!'

**(மின்னும்)**

சிரி சிந்தி செயல்படு!

# ஆடி!

கருத்து: யுவா
படம்: பிள்ளை












Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.